Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

Editor: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 232

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

ஸ்ரீ [illegible] பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1968 ஏப்ரல்மீ கீலக௵ சித்திரைமீ

# ஜன்ம நக்ஷத்ர விசேஷ நிகழ்ச்சி.

இதைப்பற்றி விளக்கம் தெரிவிக்கவேணுமென்று பல ஆப்தர்களின் கடிதங்கள் பலபல ப்ராப்தமாகி யிருக்கின்றன. புதிதாகத்தெரிவிக்கவேண்டியது என்ன இருக்கின்றது? முன்னிதழில் தெரிவித்திருந்தபடி 10—3—68 ஸ்ரீ குலசேகராழ்வார் திருநக்ஷத்ரத்திலிருந்து 19—3—68 நம்மாழ்வார் திருநக்ஷத்ரம் வரையில் உபயவேத கோஷ்டிகளும் அடியேனுக்கும் மற்றுமுள்ளார்க்கும் பரமத்ருப்திகரமாக நடைபெற்றன. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, திருமலை திருப்பதி. சின்னஜீயர் ஸ்வாமியும், (உள்ளூர்) ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியமணவாள யதீந்த்ரப்ரவண ராமாநுஜஜீயர் ஸ்வாமியும் பத்து நாளும் கோஷ்யை அலங்கரித்து நிர்வஹித்தருளினது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது. ப்ரதி ஸம்வத்ஸரம் ஸ்ரீமத் திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி யெழுந்தருளி அநுக்ரஹிப்பது வழக்கம்: அந்தபாக்கியம் இந்த ஸம்வத்ஸரமும் பர்யாயத: ப்ராப்தமாயிற்று. அத்யாபக ஸ்வாமிகள் ஐம்பது திருநாமங்களும், வேதபாராயண ஸ்வாமிகள் பதினைந்து திருநாமங்களும் எழுந்தருளியிருந்தது * பொலிக பொலிக வென்று போற்றும்படியாக விருந்தது.

உபந்யாஸ கோஷ்டிகளும் வழக்கம்போல் நடைபெற்றன. ஸ்ரீமதுபயவே. ஆழ்வார்திருநகரி. ஸ்ரீஸூக்திரத்னகர. இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமி (ஸம்பந்தி ஸ்வாமி), ஸ்ரீமதுபயவே. திருவயிந்திரபுரம் T. S. ராமாநுஜாசாரியர் ஸ்வாமி (Advocate), ஸ்ரீஉவே. திருநாங்கூர். பிரதிவாதி பயங்கரம் வித்வான் அண்ணங்கராசாரியர், எழும்பூர். அட்வொகேட். R. V. சேஷாத்ரியாசாரியர், ப்ரஹ்மஸ்ரீ. கும்பகோணம் அய்யா ஸ்வாமி ச்ரௌதிகள் முதலானோருடைய மிகச்சிறந்த உபந்யாஸங்கள் நடைபெற்றன, முடிவில் ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி வரதாசரார்ய ஸ்வாமியின் மங்களாசாஸனோபந்யாஸம் சிகரமாக அமைந்தது.

இடையில் 16 3—68 சனிக்கிழமையன்றிரவு 9-மணி முதல் 12 மணி வரை ஆச்சரியமான ஹரிகதாகாலக்ஷேபம் – ஆண்டாள் திருக்கல்யாணம் நடைபெற்றது. ஸ்ரீமதி. பாலபாரதி. யதுகிரி குமாரி பக்கவாத்யக்காரர்களுடன் பெங்களூரிலிருந்து இதம்பரமாகவந்து நடத்திய பெருமை எழுதமுடியாதது. ஸங்கீதபூஷண அச்வத்த நாராயணசாஸ்திரிகள் பிடில் வாசித்தவர். வித்வான் பழனிஸாமியவர்கள் மிருதங்கம். எதிர்பாராத அமைப்பு இது. ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகள் அக்ராஸனம் வஹித்துத் திருச்செவி சாத்தினார்களென்பதொன்றே போதும். ஸ்ரீயதுகிரிகுமாரி ஏழு பாஷைகளில் காலக்ஷேபம் செய்யவல்லவள். அனேகம் டைட்டல்கள் பெற்றவள். அன்றைக்கும் விசக்ஷணா என்று விருது பெற்றது விசேஷமன்று.

பெங்களூர்நகர திலகர்களாய் ஞானசீலவயோவிருத்தர்களான ஸ்ரீஉவே. N. C. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், (அவருடைய திருத்தம்பியார்) N. C. செல்லப்பிள்ளை ஐயங்கார் ஆகிய இருவரும் பெங்களூரிலிருந்து எழுந்தருளியிருந்து இரண்டுநாள் கோஷ்டியை அலங்கரித்தது பெருமைகளுக்கெல்லாம் மேற்பட்ட பெருமை. —பத்ராதிபர்.

# ஸ்ரீ ராமாநுஜன் — 232



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 20 | ப்லவங்கஞூ சித்திரைமீ 1968 ஏப்ரல் வெளியீடு. | ஸஞ்சிகை 4


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—6.

[திருவெள்ளறைப் பாடல்.]

கல்லிருந்தான் தந்தை கமலத்தோன் அக்கமலத்
தில்லிருந்தான் தந்தையரங் கேசனென்றே—தொல்லைமறை
யுள்ளறையா நின்றமையால் உள்ளமே! கள்ளமின்றி
வெள்ளறையான் தாளே விரும்பு.

| | | | |
|---|---|---|---|
| உள்ளமே | எனது மனமே! | தொல்லை மறை யுள் அறையா நின்றமையால் | அநாதியான வேதங்களில் ஓதப்பட்டிருத்தலால் |
| கல் இருந்தான் தந்தை கமலத்தோன் | ''கைலாசமென்னும் மலையை விருப்பவனான சிவனுக்குத் தந்தை பிரமனுவான்; | கள்ளம் இன்றி | கபடமில்லாமல் |
| அக் கமலத்தில் இருந்தான் தந்தை அரங்கேசன் | அப்பிரமனது திருத்தந்தை ஸ்ரீமந் நாராயணனுவான்'' | வெள்ளறையான் | திருவெள்ளறைப் பெருமானுடைய |
| என்று | இவ்வண்ணமாக | தாளே | திருவடிகளையே |
| | | விரும்பு | விரும்புவாயாக. |

* * * திருமழிசைப்பிரான் தமது திருவந்தாதியை “நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்'' என்று தொடங்கினர். அப்பாசுரத்தையே பின்பற்றியது இப்பாட்டு. அவ்வாழ்வார் அருளிய பொருள் வேதஸித்தமேயல்லது ஸ்வதந்த்ரோக்தியன்று என்று காட்டத் “தொல்லை மறையுள் அறையாநின்றமையால்'' என்றார். திருவெள்ளறைக்கு ச்வேதாத்ரியென்று வடமொழித் திருநாமம். பெரியாழ்வாரும் கலியனும் பாடிய தலம். ... ❋ (6)

# நம் முன்னோர்கள் செய்துவைத்த மூன்று நற்செயல்கள்

ஆசார்யஹ்ருதயம் முதற்பிரகரண முடிவில்—

**“அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணாச்ரம வித்யா வ்ருத்தங்களை கர்த்தபஜந்மம் ச்வபசாதமம் சில்பநைபுணம் பஸ்மாஹுதி சவவிதவாலங்கார மென்று கழிப்பர்கள்”**

என்கிற சூர்ணை ஜன்மோத்கர்ஷாபகர்ஷ நிர்ணயத்தில் ஸகல சாஸ்த்ரஸாரமானது. இதற்குச் சேர விஷ்ணு தேவாலயங்களில் நம் பூர்வாசாரியர்கள் மூன்று செயல்களைச் செய்துவைத்தருளினர். (1) கஜேந்த்ர மோக்ஷமஹோத்ஸவ நிகழ்ச்சி. (2) கைசிக புராண படனம். (3) திருக்கச்சிநம்பிகளின் திவ்யமங்கள விக்ரஹப்ரதிஷ்டை.

1. ஒரு ம்ருக ஜாதியிற்பிறந்த கஜேந்திராழ்வான் மடுவின் கரையிலே ஒரு நீர்ப் புழுவின் வாயிலகப்பட்டுத் துடித்தபோது அரைக்குலையத் தலைகுலையப் பதறியோடி வந்து அருள் செய்த கதை புராண ப்ரஸித்தம். இத்தகைய பக்தாநுக்ரஹ ப்ரகாசகங்களான இதிஹாஸங்கள் பல காணநிற்கவும் கஜேந்திர மோக்ஷத்தைப் பெரிய உற்சவமாகக் கொண்டாடி வரும்படி ஆசாரியர்கள் நியமித்து எங்கும் நடந்து வருவதானது எம்பெருமான் அருள் செய்யுமிடத்து “அநாலோசிதவிசேஷாசேஷலோக சரண்ய!” என்று எம்பெருமானார் அருளிச்செய்தபடியே மேடு பள்ளம் பாராதே வர்ஷிக்கும் காளமேகம் போலே தன்னுடைய திருவருளை எங்கும் ஸமரூபமாகப் பொழியுமவன் என்பதை உலகுக்குக் காட்டவேயாம்.

2. **கைசிகபுராண படனம்.** நம்பாடுவான் சரித்திரம் உலகில் நன்கு பரவியதே. [இச்சஞ்சிகையிலும் மேலே விளக்கம் தரப்படும்.] ஆசார்யஹ்ருதயத்தில் “விச்வாமித்ர விஷ்ணுசித்த துலஸீப்ருத்யரோடே உள்கலந்து தொழுகுலமானவன் நிலையார் பாடலாலே ப்ராஹ்மண வேள்விக் குறை முடித்தமையும்” என்றருளிச் செய்தபடி சண்டாள ஜாதியிற் பிறந்தவொரு பரமபக்தன் அந்தணனொருவனுக்கு அருள் செய்த இதிஹாஸம் புராணத்தில் ஒரு மூலையில் கிடக்க, பட்டர் அதை யெடுத்து வியாக்கியானம் செய்தருளித் திருவரங்கநாதன் திருமுன்பே வாசித்தருளி லோகோத்தரமான சிறப்புகள் பெற்று, அதைப் பரம்பரையாகவும் பெற்றுவரும்படி செய்திருப்பதும், இதனை விஷ்ணுவாலயங்களெல்லாம் ஆசாரத்தில் கொண்டுவருவதும் பக்தர்கள் மிகமிகக் குறிக்கொள்ளத் தக்கதாம்.

3. **திருக்கச்சிநம்பிகளின் திவ்யமங்கள விக்ரஹ ப்ரதிஷ்டை.** ஆளவந்தாருடைய திருவடிகளில் ஒருவரான திருக்கச்சிநம்பிகள் எந்த வருணத்தில் திருவவதரித்தவரென்று இன்னமும் விசாரணை இருந்துவருகிறது. ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் கூரத்தாழ்வான் முதலான மஹாசாரியர்களின் திவ்யமங்கள விக்ரஹ ப்ரதிஷ்டை காணாத தேவாலயங்களிலும் திருக்கச்சிநம்பிகளின் விக்ரஹப்ரதிஷ்டை காணாநின்றோம். ஆளவந்தாருடைய திருவடிகளாயும் எம்பெருமானாருடைய ஆசாரியர்களாயும் விளங்கின பெரிய நம்பி திருமலைநம்பி திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டான் முதலானோர்க்கு இல்லாத அதிசயம் திருக்கச்சிநம்பிகளிடத்தில் என்ன விருந்ததென்று பார்க்கவேணும். அஹங்கார

ஹேதுவல்லாத தொண்டக்குலத்தில் பிறப்புத்தான் அவ்வதிசயமென்று தேறும். திருவிளக்கு இருட்டறையில் பிரகாசிப்பதுபோல ஜ்ஞானநுஷ்டான ஸம்பத்துக்களெல்லாம் அஹங்கார ஸ்பர்சமற்ற அவரஜாதியிலே பெருமேன்மை பெறுவதாகப் பூர்வாசார்ய ஸித்தாந்தம் மிக விளக்கமுற்றது. ... ...

# நம்பாடுவான் சரிதைச் சுருக்கம்.

சண்டாள ஜாதியிற் பிறந்த பரம பக்தனொருவன் பட்டர் திருவாக்கினால் **நம்பாடுவான்** என்று விருது பெற்றான். ஸாத்விக புராணங்களுள் ஒன்றான வராஹ புராணத்தில் ஸ்ரீ வராஹநயினாருக்கும் பூமிப் பிராட்டிக்கும் ஸம்வாதமாக அமைந்ததொரு கட்டத்தில் பெருமாள் தம் வாக்கினால் நம்பாடுவானென்று வ்யபதேசித்ததாகவுள்ளது. திருவாய்ப்பாடியில் ஒரு கோபிகையின் சரித்திரம் சொல்லுகிற பராசர முனிவர் "காசித் ஆவஸத ஸ்யாந்தஸ் ஸ்தித்வா த்ருஷ்ட்வா பஹிர் குரும்" இத்யாதி ச்லோகத்தில் 'காசித்' என்றாரேயொழிய அவள் பெயர் இன்னதென்று கூறிற்றிலர். ஆயினும் மேலே "சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம்" என்றதில் சிந்தயந்தீ என்று விசேஷணமிட்டதையே கொண்டு அவ்வாய்ச்சியை சிந்தயந்தியென்றே வியபதேசித்ததுபோல இப் பரம பக்தனையும் நம்பாடுவானென்றே வியபதேசித்தருளினர். *நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளையென்பர், அவரவர்த மேற்றத்தால்* என்ற உபதேச ரத்தினமாலைப் பாசுரம் இங்கு நினைவுக்கு வருகின்றது.

இப்பரம பக்தன் திருக்குறுங்குடி ப்ராந்தத்தில் ஒரு சேரியில் குடில்கட்டி வாழ்ந்தவன். நல்ல துதிப்பாடல்களைச் சங்கீதம் பொலியப்பாடி எம்பெருமானையுகப்பிப்பதை இயல்பாகக் கொண்டவன். இவன், ஒரு கார்த்திகை மாதத்துச் சுக்லபக்ஷ ஏகாதசியின் அபரராத்ரியில் வீணையுங் கையுமாகப் புறப்பட்டுத் திருக்குறுங்குடியை நோக்கிச் செல்லுமளவில் வழியிடையில் ஒரு ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் கையிலே அகப்பட்டான். அவ்வரக்கன் ஊன்மல்கி மோடுபருத்தவனாகையாலே வலிமிக்கவனாயிருந்தான். நம்பாடுவான் *நினைந்து நைந்துள் கரைந்துருகியிருப்பவனாகையாலே மிக மெலிந்திருந்தான். அந்தணனல்லாமையாலே ஒரு பஞ்சாதியைச் சொல்லி விடுவித்துக்கொள்ள மாட்டிற்றிலன். தன்னையடித்துப் புடைத்துப் புசிப்பதாக உறுதி கொண்ட ப்ரஹ்மராக்ஷஸனை நோக்கி நம்பாடுவான் 'அப்பா! நான் சிற்றஞ் சிறுகாலையில் எம்பெருமானைப் பாடும் விரதமுடையேன்; பத்து ஸம்வத்ஸரமாக இங்ஙனே பாடிவருகிறேன்; இதோ போய்த் திருக்குறுங்குடி வாசலிற்பாடிவிட்டு மீண்டும் உன்னிடமே விரைந்து வருவேன்; அப்போது என்னை நீ யதேஷ்டமாகப் புசிக்கலாம்; இப்போது விட்டிடாய்' என்று வேண்டினன். அது கேட்ட அரக்கன் 'நான் பத்து நாளாகப் பட்டினி கிடக்கிறேனாதலால் இன்று தெய்வவசமாகக் கிடைத்தவுன்னை விடமாட்டேன்; பாடிவிட்டு உடனே மீண்டு வருவதாகப் பொய் சொன்னவுன்னை விடவும் தகாது, உன்னைச் சித்ரவதம் பண்ணி உண்டு பசி தீர்வேனத்தனை' என்று கடிந்து கூற, நம்பாடுவான் அரக்கனுக்குத் திடநம்பிக் கையுண்டாகும்படி பல சபதங்களைச் செய்யப்புகுந்து, "பரதார பரிக்ரஹம் பண்ணுமவன்,

உண்ணுமிடத்தில் தனக்கும் பிறர்க்கும் பாகபேதம் பண்ணுமவன், அந்தணனுக்கு பூமி தானஞ் செய்து அதனை மீளவும் அபஹரிப்பவன், பசுவதஞ்செய்பவன், கன்னிகாதானம் பண்ணுவதாக வாக்களித்து மறுப்பவன், குருத்ரோஹ ராஜத்ரோஹ மித்ரத்ரோஹங்கள் பண்ணுமவன், நாராயணனை விட்டு தேவதாந்தரத்தை பஜிப்பவன், நாராயணனை தேவதாந்தரதுல்யனாக நினைப்பவன் முதலான பாபிகளுக்கு நேருங்கதி எனக்கு நேரக் கடவது உடனே நான் மீளவந்திலேனாகில்'' என்று பலவாறு சபதமிட்டனன்.

இதனால் நம்பிக்கையும் மகிழ்ச்சியுங்கொண்ட அரக்கன் 'கடுகப்போய் உனது விரதத்தை நிறைவேற்றிவாராய்' என்று அனுமதிதந்து அனுப்ப, நம்பாடுவான் விரைந்தோடிச் சென்று திருக்குறுங்குடி வாசலிலே தனது ஜாதிக்கேற்பத் தான் நிற்க நிலமான விடத்தே நின்று ஆனந்தமாகப் பாடிவிட்டுப் பொழுது விடிந்தவாறே தன்னுடைய ஐம்பூதவுடல் தொலையப் போகிறதென்னுமுவப்பினால் தன் வாக்குறுதி தப்பாதபடி அரக்கன்பாடே விரைந்தோடி வருகையில், எம்பெருமான் ஒரு திவ்யபுருஷ வடிவு கொண்டு எதிரேவந்து நின்று இவனுள்ளம் சோதிக்கைக்காக 'அன்பனே! இவ்வழியில் செல்லலாகாது; அரக்கன் கையிலகப்பட்டுச் சாவாமே வேறு வழியே செல்வாயாக' என்று சொல்லவும், நம்பாடுவான் 'நான் ஸத்யம் தவறமாட்டேன்' என்று விடை கூறிவிட்டு, கடுநடையிட்டு அரக்கன்பாடே வந்துநின்று 'என் விரதத்தைச் செவ்வனே தலைக்கட்டி வந்திட்டேன்; இனி என்னை நீ யதேஷ்டமாகத் தின்று பசி தீர்வாயாக' என்று கூற, அரக்கன் ஆச்சரியமடைந்து 'அப்பா! உயிரை விடுவதாகவந்த நீ உயிரோடே சென்று உறவினரோடே கூடவேண்டில் இரவு எம்பெருமானுக்குப் பாடின பாட்டின் பலனைத் தந்து உயிரோடே போவாயாக' என்றான்; நம்பாடுவான் 'உன் சொற்படி என்னை நீ புஜிக்கவேண்டுமத்தனையொழிய கீதபலன் கேட்கத் தகாது' என்று மறுத்திடவும், அரக்கன் 'கீதபலனெல்லாம் தாராவிடினும் பாதியாகிலும் அதிற்பாதியாகிலும் அதிலும் பாதியாகிலும் தந்து என்னைக் காத்திடாய்' என்று சொல்லிக் காலிலே விழுந்திட, நம்பாடுவான் உன்னுடைய பூர்வவ்ருத்த மென்னவென்று வினவ, ''நான் சரககோத்ரத்திலே ஸோம சர்மாவென்கிற ஒரு ப்ராஹ்மணன்; ஒரு யஜ்ஞத்தை அசாஸ்த்ரீயமாகச் செய்து அது முடிவதற்குமுன்னே மரணமடைந்திட்டேன்; அதனால் இப்பாபயோனியிலே வந்து பிறந்தேன்; இன்று கீதப்ரபாவத்தாலே என்னை நீ ரக்ஷித்தேயாகவேணும்' என்று அரக்கன் மிகமிக வேண்ட, நம்பாடுவான் தான் பாடின பாட்டுக்களில் மிகச் சிறந்ததான கைசிக மென்னும் பண்ணின் பலனைத் தந்து அவனைப் பாபத்தில் நின்றும் விடுவித்துச் சென்றனன்.

கைசிகப்பண்ணின் பெருமை விளங்கின த்வாதசியென்னுங் காரணத்தினால் (கார்த்திகைமாதச் சுக்லபக்ஷ த்வாதசி) கைசிக த்வாதசியென்று ப்ரஸித்திபெற்றது. பட்டர் வியாக்கியானத்தோடுகூடின கைசிகபுராணம் அடுத்தபடியாகப் பதிப்பிக்க லாகிறது. நியமத்தோடு ஸேவிக்க. ... ... ...

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# கைசிக புராணம்

## பொதுத் தனியன்கள்

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்
லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாத யாமுந மத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

யோநித்யமச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே
அஸ்மத்குரோர்பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே,

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீ பக்திஸார குலசேகர யோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத் பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்,

### விசேஷ தனியன்கள்

ஸ்ரீ பராசரபட்டார்ய: ஸ்ரீ ரங்கேசபுரோஹித:
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே.
நமஸ்தேஸ்து வராஹாய லீலயோத்தரதே மஹீம்
குரமத்ய கதோ யஸ்ய மேரு: கணகணாயதே.
ப்ரளயோதந்வதுத்தீர்ணாம் ப்ரபத்யேஹம் வஸுந்தராம்
மஹாவராஹ தம்ஷ்ட்ராக்ர மல்லீகோச மதுவ்ரதாம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதாதிவராஹபரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

வராஹபுராணத்தின் உள்ளீடான

# கைசிக புராணம்

ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த

வியாக்கியானத்துடன் கூடியது,


ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியரால்



சென்னை, ஸ்ரீ ராகவசிம்மம் பிரஸ்ஸில் அச்சிடுவிக்கப்பட்டது

ஸ்ரீ ராமாநுஜன் அநுபந்தம்.

கிடைக்குமிடம்:

P. B. ANNANGARACHARYA.

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

விலை 1—00

ப்லவங்க ஹு கைசிகத்வாதசி

1967.

ஸ்ரீ:

## பட்டரருளிச்செய்த வியாக்கியானத்தின் அவதாரிகை

''வேதோகிலோ தர்மமூலம்'' என்றும் ''பித்ரு தேவ மநுஷ்யாணாம் வேதச்சக்ஷுः ஸநாதநம்'' என்றும் சொல்லுகிறபடியே அதீந்த்ரியங்களான தத்வஹித புருஷார்த்தங்களில் ப்ரமாணபூதங்களான வேதங்களுக்கு பரிகரபூதங்களான வித்யா ஸ்தாநங்கள் பத்து. இவற்றில்,

சிக்ஷையானது — வர்ணங்களினுடைய உச்சாரண விசேஷ ப்ரதிபாதந மாத்ரத்திலே தத்பரமாகையாலும்;

நிருக்தமானது—வர்ண ஸாமாந்யாதிகளைக் கொண்டு பதார்த்த விசேஷ ப்ரதிபாதநத்திலே தத்பரமாகையாலும்;

ச்சந்தோ விசிதியானது—வர்ண ஸங்க்யா விசேஷ நியத காயத்ர்யாதிச் சந்தோ மாத்ர ப்ரதிபாதகமாகையாலும்;

வ்யாகரணமானது—வர்ண ஸமுதாயாத்மகங்களான பதங்களினுடைய ஸாதுத்வ மாத்ர வ்யாப்ருதமாகையாலும்;

கல்பஸூத்ரங்கள்—பதஸங்காதரூப வாக்ய விசேஷ சோதித கர்மாநுஷ்டாந விசேஷ கல்பநா ப்ரவ்ருத்தங்களாகையாலும்;

ஜ்யோதிஷமானது—யதா சாஸ்த்ராநுஷ்டேயங்களான கர்மங்களை யதாகாலமநுஷ்டிக்கும்படி காலவிசேஷ ப்ரதர்சந ப்ரதானமாகையாலும்;

ந்யாய சாஸ்த்ரமானது—ப்ரமாணாதி ஷோடச பதார்த்த வ்யவஹாரமாத்ர ப்ரதிஷ்டாபக மாகையாலும்;

மீமாம்ஸையானது—ஸோபப்ரும்ஹணங்களான வேதங்களினுடைய வசந வ்யக்தி விசேஷ நிர்த்தாரணார்த்த யுக்தி விசேஷ ப்ரதிஷ்டாபக மாகையாலும்;

உபப்ரும்ஹணங்கள் தன்னில் தர்மசாஸ்த்ரங்கள் கர்மபாகோபப்ரும்ஹண ப்ரதாநங்களாகையாலும்;

ப்ரஹ்மபாகோபப்ரும்ஹண ப்ரதாநங்களான இதிஹாஸ புராணங்களில் இதிஹாஸங்கள்—தர்மாதி புருஷார்த்த விசேஷ ஸ்வரூபத்தை முன்னிட்டுக்கொண்டு ப்ரவர்த்திக்கையாலே தத்வ ப்ரதிபாதநத்தில் விளம்பித ப்ரத்யயங்களாகையாலும். இவைகள் தத்வஹித புருஷார்த்த ப்ரதிபாதநத்தில் அப்ரயோஜகங்களாகக் கடவன.

புராணங்கள் பரதத்வ பரமஹித பரமபுருஷார்த்தங்களில் ஸாக்ஷாதுபப்ரும்ஹணங்களாகக் கடவன. புராணங்கள் தன்னில்—

''ஸங்கீர்ணாஸ்ஸாத்விகாச்சைவ ராஜஸாஸ் தாமஸாஸ் ததா'' என்று கல்ப விசேஷங்களை விபஜித்து,

> யஸ்மிந் கல்பே து யத் ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணா புரா
> தஸ்ய தஸ்ய து மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே.
> அக்நே: சிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே
> ராஜஸேஷு ச மாஹாத்ம்யமதிகம் ப்ரஹ்மணோ விது:

ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாம்ச நிகத்யதே
ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே:
தேஷ்வேவ யோகஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராம் கதிம்.

என்று சொல்லுகிறபடியே ஸாத்விக கல்பங்களிலே ஸத்வோத்தரனான ப்ரஹ்மாவாலே ப்ரோக்தங்களாய்,

*ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம்* என்றும்
*ஸத்வம் விஷ்ணு ப்ரகாசகம்* என்றும்

சொல்லுகிறபடியே அஜ்ஞான, ஸம்சய, விபர்யயங்கள் தீரும்படி பரதத்வாதி விசேஷ நிச்சாயகங்களான ஸாத்விக புராணங்களே முமுக்ஷுக்களுக்கு உபஜீவ்யங்களாகக் கடவன.

ஸாத்விக புராணங்கள் தன்னில் இதர வக்த்ருகங்களான புராணங்களிற் காட்டில் பரமஸத்வ ஸமாச்ரயனான பகவான் வக்தாவாக ப்ரவ்ருத்தமான புராணமே உத்க்ருஷ்டமாகக்கடவது.

பகவத் வாக்யங்கள் தன்னிலும்—

“கள்ள வேடத்தைக் கொண்டு போய்ப் புறம் புக்கவாறும் கலந்தசுரரை உள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட வுபாயங்களும்” என்கிறபடியே “திண்கழல்காலசுரர்க்குத் தீங்கிழைக்குந்திருமால்” என்கிற ஸர்வேச்வரன் ஆஸுர ப்ரக்ருதிகளுடைய மோஹனார்த்தமாக அருளிச் செய்யும் வார்த்தைகள் ஸாத்விகர்களுக்கு உபஜீவ்யங்களாகா.

மற்றும் இவனுடைய அவஸ்தா விசேஷங்களில் வாக்யங்களைப் பார்த்தால்...

பரமபத நிலயன் அருளிச்செய்யும் வார்த்தை—பரன் வாக்யமாகையாலே பந்தமில்லாதார் கேட்கும்படியாயிருக்கும்.

க்ஷீராப்திநாதன் வாக்யங்களைப் பார்த்தால் கடலோசை யோடே கலந்து அர்த்த ப்ரத்யாயகமாகாது.

மத்ஸ்யரூபியானவன் வாக்கியத்தைப் பார்த்தால் ஒருகாலும் கரையேற்ற மற்றவன் வார்த்தையாகையாலே ஜடாசய ஸம்பந்தம் தோற்றும் படியாயிருக்கும்.

கூர்மரூபியானவன் வார்த்தையைப் பார்த்தால் கம்பீரர் கலங்கவும் ஸ்திரர் ப்ரமிக்கவும், கீழ்மையிடாமலிருக்குமவன் சொல்லும் வார்த்தையாகையாலே மேற்கொள்ளும் வார்த்தையாயிராது.

ஸ்ரீந்ருஸிம்ஹன் வாக்யம்—கழுத்துக்குமேலொருபடியும் கீழொருபடியுமாகையாலே ப்ரதோஷோதிதமா யிருக்கும்.

ஸ்ரீவாமனன் வாக்யம்—அடியிற் சொன்னபடி யன்றிக்கே விஷமபதமாயிருக்கும்; இவ்வளவுமன்றிக்கே கவியாயிருப்பானொருத்தனளவிலே கண்ணழிவை யுடைத்தாயிருக்கும்.

பரசுராமன் வாக்யம்—பரசுதாரணம் பண்ணி ஸர்வாவஸ்தைகளிலும் க்ஷமை விட்டவன் வார்த்தையாகையாலே ப்ரத்யயம் பிறக்கும்படியிராது.

சக்ரவர்த்தித் திருமகன் வாக்யம்—கபிகளோடே கலந்து புண்யஜனபாதாபர்யந்தமாயிருக்கும்.

பலபத்ரன் வாக்யம்—ஸர:ஸ்ரோதஸ்ஸாலே தாழப்போவாரையும் உத்பதப்ரவ்ருத்தராக்கினவன் வார்த்தையாகையாலே மதவிகாரம் தோற்றியிருக்கும். அவ்வளவன்றிக்கே சுத்தவர்ணனாயிருக்கச் செய்தேயும் கலப்பையுடையவன் வார்த்தையாகையாலே விச்வஸிக்க வொண்ணாதபடியாயிருக்கும்.

ஸ்ரீ க்ருஷ்ணன் வாக்யம்—பிறந்தவன்றுதொடங்கிக் கைவந்த களவிலே காண லாம்படியாயிருக்கும்.

கல்க்யவதாரத்தின் வாக்யம்—வரப்போகிறதென்றிருக்குமதுபோக்கி ஒருவருக்கும் கை வந்திருக்கும் வார்த்தையன்று. அவ்வளவன்றிக்கே அனுமானித் தறியவேண்டியதா யிருக்கும். இப்படிக்கொரு அந்யதாசங்கை பண்ணவொண்ணாதபடி,

"ஏனத்தினுருவாகி நிலமங்கையெழில் கொண்ட
ஞானத்தினொளியுரு" என்றும்
"ஏனத்துருவாயிடந்த ஞானப்பிரான்". என்றும்

சொல்லுகிறபடியே ஸம்யக்ஜ்ஞாநோபகாரகனாகையாலும், "பன்றியாயன்று பாரகங்கீண்ட பாழியானாழியானருளே நன்று நானுய்ய" என்று ஜ்ஞானவான்கள் விச்வஸித்துக் கைக் கொள்ளும்படியான க்ருபாதிசயத்தை யுடையவனாகையாலும், "ஆதிமுனேனமாகி அரணாய மூர்த்தியது நம்மையாளுமரசே" என்று சொல்லுகிறபடியே ரக்ஷகத்வபூர்த்தியையுடைய வனாகையாலும், "இருங்கற்பகஞ்சேர் வானத்தவர்க்குமல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க் கும் ஏனத்துருவாயிடந்த ஞானப்பிரானையல்லாலில்லை நான்கண்ட நல்லது" என்று ஆழ்வாரும் ப்ரதம ப்ரபந்தத்திலே ஸர்வர்க்கு மிவனையொழிய ரக்ஷகாந்தரமில்லையென்று அறுதியிட்டு, சரம ப்ரபந்தத்தின் முடிவிலும்,

"நீலவரையிரண்டுபிறைகவ்வி நிமிர்ந்த தொப்பக்
கோல வராகமொன்றாய் நிலங்கோட்டிடைக்
கொண்ட வெந்தாய் நீலக்கடல் கடைந்தாயுன்னைப்
பெற்றினிப் போக்குவனோ"

என்று அவதாரங்க ளெல்லாம் கிடக்கச் செய்தே இந்த அவதாரத்தில் தாம் அந்தமில் பேரின்பம் பெற்றபடியை அருளிச்செய்கையாலும், அவனுடைய ரக்ஷகத்வமானது உத் தாரகமான ரக்ஷகத்வமாகையாலும், இப்படியிவன் பண்ணுகிற ரக்ஷணம் வாத்ஸல்யமூல மென்று தோற்றும்படி

"ஏனமாய் நிலங்கீண்ட என்னப்பனே" என்றும்
"அப்பனூன்றியிடந் தெயிற்றில் கொண்டநாள்" என்றும்

வாத்ஸல்யாவிநாபூதமான பித்ருத்வ மிவனுக்குண்டென்று சொல்லுகையாலும் வராஹா வதாரமே ஸர்வோத்க்ருஷ்டமாகக் கடவது.

ஸகல லோக பிதாவான இவனை ஸகலலோகமாதாவான பூமிப்பிராட்டி பிரஜை களுக்கு ஹிதமேதென்று ப்ரச்நம் பண்ண ப்ரவ்ருத்தமான புராணமாகையாலே, இப் புராணம் எல்லாப் புராணங்களிலும் உத்க்ருஷ்டமாகக் கடவது.

இது ஸர்வேச்வரன் நாச்சியாரைப்பார்த்தருளிச்செய்யும் வார்த்தையாகையாலே,

"பாம்பணையார்க்கும் தம்பாம்புபோல் நாவு
மிரண்டுள வாய்த்து"

என்கிறபடியே இதுவு முபாலம்ப விஷயமாகிலோ வென்னில்; அவ்வார்த்தையும்—

"செம்மையுடைய திருவரங்கர் தாம்பணிந்த மெய்மைப் பெருவார்த்தை
விட்டுசித்தர் கேட்டிருப்பர்"

என்றறிந்திருக்கச் செய்தேயும், விச்லேஷக்லேசம் பொறுக்கமாட்டாதபடியான த்வராதி சயத்தாலே "பாம்பணையார்க்கும் தம் பாம்பு போல் நாவுமிரண்டுளவாய்த்து" என்று அனந்தபுஜக ஸம்ஸர்க்கதோஷத்தாலே பொய்யாகிறதோ வென்று அதிசங்கை பண்ணி னளித்தனை.

இவ்வார்த்தை அப்படியன்றிக்கே, "பார்வண்ணமடமங்கை பத்தர்" —என்கிற படியே நாச்சியார் பக்கலுண்டான பாவபந்தத்தாலே ப்ரளயார்ணவ மக்நையான இவளை அதில் நின்று மேலெடுத்து, இவளுடைய க்லேசத்தைத் தவிர்த்துவைத்த வளவிலும், ஸம்ஸாரார்ணவ மக்நரான தன் பிரஜைகளினுடைய து:க்க நிவ்ருத்திக்கொரு ஸுகரோபாயம் காணாமையாலே விஷண்ணையாயிருக்கிற இவளைக் கண்டருளின பகவான் இவள் தேறும்படியாகச்சொன்ன வார்த்தையாகையாலே அதிசங்கை பண்ணவேண்டியதில்லை.

ஆகையாலே, அவஸ்தாந்தரங்களிற் போலன்றிக்கே, வராஹாவஸ்தையில் தமக்கருளிச் செய்யும் வார்த்தை தப்பாரென்னுமர்த்தத்தை—

*பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாம்
தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்
பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே.*

என்று நாச்சியார் தாமே அருளிச்செய்தார்.

ஆகையால் இந்தப்புராணம் எல்லாப் புராணங்களிலும் உத்க்ருஷ்டமாகத் தட்டில்லை, எங்ஙனேயென்னில்—

இப்புராணந்தன்னில் பகவானருளிச் செய்த உபாயங்களெல்லாத்திலும் கானரூபமான உபாயமே அத்யந்தோத்க்ருஷ்டமாகக்கடவது. இவர் பல உபாயங்களுமருளிச் செய்யக் கேட்டருளின நாச்சியார் உபாயங்களெல்லாம் கிடக்கச்செய்தே இக்கான ரூபமான உபாயத்தைத் தாம்பற்றி.—

பாற்கடலுள்பையத்துயின்ற பரமனடி பாடி — என்றும்
ஓங்கியுலகளந்த வுத்தமன் பேர்பாடி— என்றும்
தூமலர் தூவித்தொழுது வாயினால்பாடி— என்றும்
நாராயணன் மூர்த்தி கேசவனைப் பாடவும்— என்றும்
பாவாயெழுந்திராய் பாடிப்பறைகொண்டு— என்றும்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட— என்றும்
மனத்துக்கினியானைப் பாடவும்— என்றும்
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடி— என்றும்
பங்கயக் கண்ணானைப்பாட— என்றும்
மாற்றாரை மாற்றழிக்க வல்லானைப் பாட— என்றும்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாட— என்றும்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி— என்றும்
கோவிந்தா உன்தன்னைப் பாடிப்பறைகொண்டு— என்றும்

இவரருளிச் செய்யக் கேட்ட உபாயங்களெல்லாத்திலும் இவள் திருவுள்ளத்துக்கேறத் தான் பாடின பாட்டிலே அநுஷ்டித்துக் காட்டின உபாயம் இதுவேயாயிருக்கும். ஆகையாலே, பல ப்ரதேசங்களிலும் தாம் பாடின பாட்டை அருளிச்செய்து, பாடவல்ல நாச்சியார் என்னும் பேர்பெற்றபடியாலும் இக்கீதரூபமான உபாயமே முக்யமாகக்கடவதென்று நாச்சியாரைப் பார்த்தருளிச் செய்தருளினார். * * * *

# கைசிக புராண ப்ராரம்பம்

**ஸ்ரீவராஹ உவாச—**

**जागरे तु विशालाक्षि ज्ञानतो वाऽप्यज्ञानतः ।**
**यो मे प्रगायते गेयं मम भक्त्या व्यवस्थितः ॥ १ ॥**

**ஜாகரே து விசாலாக்ஷி ஜாநதோ வாப்யஜாநத:**
**யோ மே ப்ரகாயதே கேயம் மம பக்த்யா வ்யவஸ்தித: 1**

*இந்த ச்லோகத்தில் தமக்குப் பாடுவான் பாடும்படியை அருளிச்செய்கிறார்— பாடவல்லானொருத்தன் ஜாகரவ்ரத நிஷ்டனாய் * ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய * என்கிறபடியே ப்ராஹ்மமான முஹூர்த்தத்திலே வந்து, நாம் முகம் கொடுத்துக் கேட்கிலுமாம், நாம் ஜகத்ரக்ஷண சிந்தையிலே அந்யபரராயிருக்கிலுமாம், நம்முடைய குணபதாநங்களை உள்ளீடாக வைத்துப் புணர்க்கப்பட்ட காதைகளை ஒரு பலத்தையும் நினையாமல் நம்முடைய பக்கல் பக்த்யதிசயத்தோடே நமக்கே பாடக்கடவன்—என்று நாச்சியாரைப் பார்த்தருளிச்செய்கிறார்.*

**यावन्ति त्वक्षराण्यस्य गीयमाने यशस्विनि ।**
**तावद्वर्षसहस्राणि स्वर्गलोके महीयते ॥ २ ॥**

**யாவந்தி த்வக்ஷராண்யஸ்ய கீயமாநே யசஸ்விநி**
**தாவத்வர்ஷஸஹஸ்ராணி ஸ்வர்கலோகே மஹீயதே 2**

*இப்படி உம்முடைய புகழையும் நம்முடைய புகழையும் உள்ளீடாக வைத்துப் புணர்க்கப்பட்ட காதைகளை நமக்குப் பாடினால், அந்த காதைகளுக்குண்டான அக்ஷரங்களுக்கு, இசையாலே மேலேற்றமாக ஒரோரக்ஷரங்களுக்கும் ஆயிரமாயிரம் ஸம்வத்ஸரம் ஸ்வர்கலோகத்திலே யிருக்கும் காணும் நம்பாடுவான்—என்றருளிச்செய்கிறார்.*

**रूपवान् गुणवान् शुद्धः सर्वधर्मभृतां वरः ।**
**नित्यं पश्यति वै शक्रं वज्रहस्तं न संशयः ॥ ३ ॥**

**ரூபவாந் குணவாந் சுத்த: ஸர்வதர்மப்ருதாம் வர:**
**நித்யம் பச்யதி வை சக்ரம் வஜ்ரஹஸ்தம் ந ஸம்சய: 3**

*அவன் ஸ்வர்கலோகத்திலிருக்குமளவும் அங்குள்ளாரெல்லாரிலும் வடிவழகியனுமாய், குணவானுமாய், ஸ்வர்க ஸுகத்திலே ஸக்தனுமன்றிக்கே, ஸர்வதர்மங்களையும் அறிந்து, அங்கும் நம்மை மறவாமலிருக்கிற இவன், அத்தேசத்துக்கதிபதியான இந்த்ரன் தன் ஆயுதத்துடனே வந்து ஸேவித்து நிற்க, அபாங்கவீக்ஷணம் பண்ணி யிருக்கும் காணும் நம்பாடுவான்—என்றருளிச்செய்கிறார்.*

**मद्भक्तश्चापि जायेत इन्द्रेणैकपदे स्थितः ।**
**सर्वधर्मगुणश्रेष्ठस्तत्रापि मम लुब्धकः ॥ ४ ॥**

மத்பக்தச்சாபி ஜாயேத இந்த்ரேணைகபதே ஸ்தித:
ஸர்வதர்மகுணச்ரேஷ்ட: தத்ராபி மம லுப்தக: 4

இப்படி இந்த்ரன் ஸேவித்துக்கொண்டிருக்கச்செய்தேயும், இந்த்ரனைப்போலே அங்கு நம்மை மறந்திருக்கையின்றிக்கே, நமக்காராதனங்களான கர்மங்களைச் செய்து நம்மையே அநுஸந்தித்துக்கொண்டிருப்பன் நம்பாடுவானென்றருளிச்செய்கிறார்.

इन्द्रलोकात् परिभ्रष्टो मम गेयपरायणः ।
प्रमुक्तः सर्वसंसारैर्मम लोकं च गच्छति ॥ ५ ॥

இந்த்ரலோகாத் பரிப்ரஷ்டோ மம கேயபராயண:
ப்ரமுக்த: ஸர்வஸம்ஸாரைர் மம லோகஞ்ச கச்சதி

இந்த்ரலோகத்திருக்குமளவும் அங்குள்ளாரெல்லாரையு மழைத்துப் பாட்டுக் கேட்பிக்குமளவன்றிக்கே, நம்மை நினைத்துப் பாடிப் போருகையாலே, அங்குநின்றும் இவனைக் கொண்டுபோய் நம் பெரியவீட்டிலே *ஏதத் ஸாம காயந்நாஸ்தே* என்று எப்போதும் நமக்கே பாடியிருக்கும்படி வைத்தோம் காணும்—என்றருளிச்செய்கிறார்.

एवं तु वचनं श्रुत्वा तत्प्रसादाद्वसुन्धरा ।
वराहरूपिणं देवं प्रत्युवाच शुभानना ॥ ६ ॥

ஏவந்து வசநம் ச்ருத்வா தத்ப்ரஸாதாத் வஸுந்தரா
வராஹரூபிணம் தேவம் ப்ரத்யுவாச சுபாநநா 6

இப்படி வராஹநாயனர் அருளிச்செய்யக் கேட்டு, திருவுள்ளத்திலுகப்பெல்லாம் திருமுகத்திலே தோற்றும்படி அலர்ந்த திருமுகத்தையுடையளாய்க்கொண்டு ஸ்ரீவராஹ நாயனரைப் பார்த்து பூமிப்பிராட்டி ஒரு வார்த்தை விண்ணப்பம் செய்கிறாள்.

अहो गीतप्रभावो वै यस्त्वया परिकीर्तितः ।
कश्च गीतप्रभावेन सिद्धिं प्राप्तो महातपाः ॥ ७ ॥

அஹோ கீதப்ரபாவோ வை யஸ்த்வயா பரிகீர்த்தித:
கச்ச கீதப்ரபாவேந ஸித்திம் ப்ராப்தோ மஹாதபா: 7

வேதங்களாதல், ருஷிகளாதல் சொல்லுகையன்றிக்கே தேவரீர் தாமே அருளிச்செய்யும்படியாயிருந்தது! இப்படிக்கொத்த கீதப்ரபாவத்தாலே தேவரீர் திருவடிகளைப் பெற்றவன் யாவனொருவன், அவனை யருளிச்செய்யவேணும்—என்று விண்ணப்பம் செய்தாள்.

ஸ்ரீவராஹ உவாச—

இப்படி விண்ணப்பஞ்செய்த பூமிப்பிராட்டியைப் பார்த்து வராஹநாயனரருளிச் செய்கிறார்.

शृणु तत्वेन ते देवि कथ्यमानं यशस्विनम् ।
यस्तु गीतप्रभावेन सिद्धिं प्राप्तो महातपाः ॥ ८ ॥

ச்ருணு தத்வேந தே தேவி! கத்யமாநம் யசஸ்விநம்
யஸ்து கீதப்ரபாவேந ஸித்திம் ப்ராப்தோ மஹாதபா: 8

*பாம்பணையார்க்கும் தம் பாம்புபோல் நாவுமிரண்டுளவாய்த்து* என்று நீர் நம்மைச் சொல்லும்படி உம்மோடு நாம் ரஸித்துச் சொல்லுகிற வார்த்தையாக நினையாதே இது ஸத்யமான வார்த்தையாயிருக்கும். யாவனொருவன் நம்மைப் பாடி நம் பெரிய வீடு பெற்றான் அவனைச் சொல்லுகிறோம் காணும், கேளீர்—என்றருளிச்செய்கிறார்.

अस्ति दक्षिणदिग्भागे महेन्द्रो नाम पर्वतः ।
तत्र क्षीरनदी पुण्या दक्षिणे सागरङ्गमा ॥ ९ ॥

அஸ்தி தக்ஷிணதிக்பாகே மஹேந்த்ரோ நாம பர்வத:
தத்ர க்ஷீரநதீ புண்யா தக்ஷிணே ஸாகரம்கமா. 9

வாரீர் பிராட்டியே! தக்ஷிண திக்கிலே மஹேந்திரமென்றொரு பர்வதம் ப்ரஸித்தமாயிரா நின்றது. அவ்விடத்தில் க்ஷீர நதியென்றொரு நதியானது தக்ஷிண ஸமுத்ரகாமினியாயிரா நின்றது.

तत्र सिद्धाश्रमे भद्रे चंडालः कृतनिश्चयः ।
दूरात् जागरणे गाति मम भक्त्या व्यवस्थितः ॥ १० ॥

தத்ர ஸித்தாச்ரமே பத்ரே சண்டால: க்ருதநிச்சய:
தூராஜ் ஜாகரணே காதி மம பக்த்யா வ்யவஸ்தித:. 10

முன்பு நீரும் நாமும் குறுங்குடியாகக் கட்டியிருந்த ஆச்ரமத்திலே பாபயோனியிலே பிறந்தானொருவன் நமக்குப் பாடவேணுமென்று ஸங்கல்பித்து ஜாகரவ்ரத நிஷ்டனாய், மேலும் நம்பக்கல் பக்தியோடே ப்ராஹ்ம முஹூர்த்தத்திலே வந்து தன் ஜாத்யநுகுணமாக தூரத்திலே வந்து நின்று பாடினான் காணும் என்றருளிச்செய்தார்.

एवं तु गायमानस्य गताः संवत्सरा दश ।
श्वपाकस्य गुणज्ञस्य मद्भक्तस्य वसुन्धरे ॥ ११ ॥

ஏவந்து காயமாநஸ்ய கதா: ஸம்வத்ஸரா தச
ச்வபாகஸ்ய குணஜ்ஞஸ்ய மத்பக்தஸ்ய வஸுந்தரே! 11

இப்படி அந்த்யஜாதியிலே பிறந்திருக்கச் செய்தேயும், நம் குணாநுஸந்தானத்தைப் பண்ணி, நமக்கு பக்தனாய் வந்து, இப்படி பத்து ஸம்வத்ஸரம் பாடினான் காணும் என்றருளிச்செய்கிறார்.

कौमुदस्य तु मासस्य द्वादश्यां शुक्लपक्षके ।
सुप्ते जने गते यामे वीणामादाय निर्ययौ ॥ १२ ॥

கௌமுதஸ்ய து மாஸஸ்ய த்வாதச்யாம் சுக்லபக்ஷகே
ஸுப்தே ஜநே கதே யாமே வீணாமாதாய நிர்யயௌ. 12

பின்பொரு கார்த்திகை மாஸத்தில் சுக்லபக்ஷ த்வாதசியின் ராத்திரி ஒரு யாமத்துக்குமேல் எல்லாரு முறங்கினவளவிலே, தான் ஜாகர வ்ரதநிஷ்டனுகையாலே உணர்ந்திருந்து, நாமிருக்கிற விடத்திலே வந்து, நமக்குப் பாடுவதாகக் கையும் வீணையுமாய்க் கொண்டு தன் வீட்டில் நின்றும் புறப்பட்டான் காணும்—என்றருளிச்செய்தார்.

ततो वर्त्मनि चण्डालो गृहीतो ब्रह्मरक्षसा ।
अल्पप्राणः श्वपाको वै बलवान् ब्रह्मराक्षसः ॥ १३ ॥

ததோ வர்த்மநி சண்டாலோ க்ருஹீதோ ப்ரஹ்மரக்ஷஸா
அல்பப்ராண : ச்வபாகோ வை பலவாந் ப்ரஹ்மராக்ஷஸ:. 13

அநந்தரம் நடுவழியிலே வந்தவளவிலே, ஒரு ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் கையி லகப்பட்டான். அந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸானது ஜன்மலக்கிமோடு பருத்தவனுகையாலே பலவானு யிருந்தான். நம்பாடுவான் நினைந்து நைந்து உள்கரைந்துருகுகிறவனுகையாலே, துர்பலனுய் இருந்தான் காணும்—என்றருளிச்செய்தார்.

दुःखेन स तु सन्तप्तो न च शक्तो विचेष्टितुम् ।
उवाच वचनं मन्दं मातङ्गो ब्रह्मराक्षसम् ॥ १४ ॥

து:கேந ஸ து ஸந்தப்தோ ந ச சக்தோ விசேஷ்டிதும்
உவாச வசநம் மந்தம் மாதங்கோ ப்ரஹ்மராக்ஷஸம். 14

நம்பாடுவான் பலவானல்லாமையாலே, பராக்ரமித்து விடுவித்துக்கொண்டு போக ஸமர்த்தனுகவில்லை, ப்ராஹ்மண ஜாதியுமல்லாமையாலே, ஒரு பஞ்சாதியைச் சொல்லி விடுவித்துக் கொள்ளவும் ஸமர்த்தனுகவில்லை. நம்முடைய பக்கல் பரந்யாஸமே பண்ணி ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸைப் பார்த்து மதுரமாக ஒரு வார்த்தை சொன்னுன் காணும்—என்றருளிச்செய்தார்.

गच्छामि सन्तोषयितुमहं जागरणे हरिम् ।
गानेन पुण्डरीकाक्षं ब्रह्मराक्षस मुञ्च माम् ॥ १५ ॥

கச்சாமி ஸந்தோஷயிது மஹம் ஜாகரணே ஹரிம்
காநேந புண்டரீகாக்ஷம் ப்ரஹ்மராக்ஷஸ முஞ்ச மாம். 15

"சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்து"— என்கிறபடியே ஸர்வேச்வரனைப் பாடிப் பறைகொள்ளப் போகிறவனுயிருக்கிற என்னை விடாயென்றுன் காணும்—என்று அருளிச்செய்கிறுர்.

एवमुक्तः श्वपाकेन बलवान् ब्रह्मराक्षसः ।
अमर्षवशमापन्नो न च किंचित्तमब्रवीत् ॥ १६ ॥

ஏவமுக்த : ச்வபாகேந பலவாந் ப்ரஹ்மராக்ஷஸ:
அமர்ஷவசமாபந்நோ ந ச கிஞ்சித் தமப்ரவீத். 16

*இப்படி நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக் கேட்டு ப்ரஹ்மரக்ஷஸ்ஸூம் அதி க்ரூரமாய், வார்த்தையும் சொல்லாதே, உதாஸித்திருந்தது காண்—என்கிருர்.*

आत्मानं प्रतिधावन्तं चंडलः प्राह राक्षसम् ।
किं त्वया चेष्टितव्यं मे य एवं परिधावसि ॥ १७ ॥

ஆத்மாநம் ப்ரதி தாவந்தம் சண்டாலோ ப்ரஹ்மராக்ஷஸம்
கிம் த்வயா சேஷ்டிதவ்யம் மே ய ஏவம் பரிதாவஸி. 17

*இப்படி கோபாக்ராந்தனுய் மேல் விழுந்து வருகிற ப்ரஹ்மரக்ஷஸ்ஸைப் பார்த்து மீளவும் நம்பாடுவானெருரு வார்த்தை சொன்னுன். நீ இப்படி என்பேரில் ஓடி வந்து செய்யப் போகிறதென்ன காணுமென்றுன்—என்கிருர்.*

श्वपाकवचनं श्रुत्वा ततो वै ब्रह्मराक्षसः ।
उवाच वचनं घोरं मानुषाहारलोलुपः ॥ १८ ॥

ச்வபாகவசநம் ச்ருத்வா ததோ வை ப்ரஹ்மராக்ஷஸ:
உவாச வசநம் கோரம் மாநுஷாஹாரலோலுப:. 18

*அந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸூ—நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக் கேட்டு, தன் பசியாலே மாநுஷ மாம்ஸத்தி லாசையுடைத்தானதாய்க்கொண்டு, இவனைப் பார்த்தொரு க்ரூரமான வார்த்தை சொல்லிற்று காணுமென்கிருர்,*

अद्य मे दशरात्रं वै निराहारस्य गच्छतः ।
धात्रा त्वं विहितो मह्यमाहारः परितो मम ॥ १९ ॥

அத்ய மே தசராத்ரம் வை நிராஹாரஸ்ய கச்சத:
தாத்ரா த்வம் விஹிதோ மஹ்யமாஹார: பரிதோ மம. 19

*''நிகரிலவன்புகழ் பாடியிளைப்பிலம்'' என்று நீ பத்து ஸம்வத்ஸரம் பாடி இளைப் பற்றுத் திரிகிருய்; நான் பத்து நாளுண்டு காண் பட்டினியே இளைத்துத் திரிகிறேன். ஆகையாலே, நமக்கு தைவம் ஆஹாரமாய்க் கல்பித்துவைத்த உன்னை விடுவேனே என்று சொல்லிற்று காணும் என்கிருர்.*

अद्य त्वां भक्षयिष्यामि सवसामांसशोणितम् ।
तर्पयित्वा यथान्यायं यास्यामि च यथेप्सितम् ॥ २० ॥

அத்ய த்வாம் பக்ஷயிஷ்யாமி ஸவஸாமாம்ஸசோணிதம்
தர்ப்பயித்வா யதாந்யாயம் யாஸ்யாமி ச யதேப்ஸிதம். 20

*இப்போது நானுன்னை விடுவதில்லை. உன் அவயவங்களைத் தனித் தனியே பிரித்து, உன் சரீரத்தின் ருதிர மாம்ஸாதிகளைக் கொண்டு தேவதாராதநம் பண்ணி, என் பசியும் தீர்த்துக்கொண்டு எனக்கிஷ்டமானபடி போவேன் என்று சொல்லிற்றுகாணும்—என்கிருர்.*

ब्रह्मरक्षोवचः श्रुत्वा श्वपाको गीतलालसः ।
राक्षसं छन्दयामास मम भक्त्या व्यवस्थितः ॥ २१ ॥

ப்ரஹ்மரக்ஷோ வச: ச்ருத்வா ச்வபாகோ கீதலாலஸ:
ராக்ஷஸம் சந்தயாமாஸ மம பக்த்யா வ்யவஸ்தித:. 21

இப்படி ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொன்ன வார்த்தையைக் கேட்டு, நம் பாடுவான் சரீரஹானி பர்யந்தமான ஆபத்து வந்தவளவிலும் நம்பக்கல் பக்த்யதிசயத்தாலே வ்யவஸ்திதனாய், நமக்குப் பாடவேணுமென்கிற ஆசையாலே அந்த ரக்ஷஸ்ஸை அனுவர்த்தித்து நன்மையான ஒரு வார்த்தை சொன்னான் காணும்—என்று அருளிச்செய்தார்,

शृणु तत्वं महाभाग भक्ष्योऽहं समुपागतः ।
अवश्यमेतत् कर्तव्यं धात्रा दत्तं यथा तव ॥ २२ ॥

ச்ருணு தத்வம் மஹாபாக பக்ஷ்யோஹம் ஸமுபாகத:
அவச்யமேதத் கர்த்தவ்யம் தாத்ரா தத்தம் யதா தவ. 22

வாராய் மஹாபாகனே! யதார்த்தம் சொல்லுகிறேன். நீ கேள். நீ சொன்ன படியே உனக்கு நான் பக்ஷ்யமாகக் கடவேன். ப்ரஹ்மா கல்பித்தபடி செய்யவேண்டியது உனக்குமெனக்கும் அவச்யம்தான் என்று சொன்னான் காணும் நம்பாடுவான்—என்று அருளிச்செய்தார்.

पश्चात्खादसि मां रक्षो जागरे विनिवर्तिते ।
विष्णोः संतोषणार्थाय ममैतत् व्रतमुत्तमम् ॥ २३ ॥

பச்சாத் காதஸி மாம் ரக்ஷோ ஜாகரே விநிவர்த்திதே
விஷ்ணோ: ஸந்தோஷணார்த்தாய மமைதத் வ்ரதமுத்தமம். 23

வாராய் ரக்ஷஸ்ஸே! எனக்கொரு நியமமுண்டு. ஸர்வேச்வரனுடைய ப்ரீத்யர்த்தமாக ஜாகரவ்ரதமென்றொரு வ்ரதமுண்டு. அது முடித்து நான் மீளவும் வருகிறேன். என்னை உனக்குப் பக்ஷ்யமாகக் கொள்ளக் கடவாய் என்று சொன்னான் காணும் நம் பாடுவான்—என்கிறார்,

रक्ष मां व्रतभङ्गाद्वै देवं नारायणं प्रति ।
जागरे विनिवृत्ते तु मां भक्षय यथेप्सितम् ॥ २४ ॥

ரக்ஷ மாம் வ்ரதபங்காத் வை தேவம் நாராயணம் ப்ரதி
ஜாகரே விநிவ்ருத்தே து மாம் பக்ஷய யதேப்ஸிதம். 24

பகவானைப் பற்றி நானேறிட்டுக் கொண்ட வ்ரதத்துக்கு பங்கம் வாராமல் நீ என்னை ரக்ஷிக்க வேணும். இந்த ஜாகர வ்ரதம் ஸமாப்த மானவாறே உன் மனஸ்ஸுக்கு சரிப்போனபடி என்னை பக்ஷ்யமாகக் கொள்ளக்கடவாய் என்று சொன்னான் காணும் நம்பாடுவான்—என்கிறார்.

श्वपाकस्य वचः श्रुत्वा ब्रह्मरक्षः क्षुधाऽर्दितम् ।
उवाच मधुरं वाक्यं श्वपाकं तदनन्तरम् ॥ २५ ॥

ச்வபாகஸ்ய வச: ச்ருத்வா ப்ரஹ்மரக்ஷ: க்ஷுதார்திதம்
உவாச மதுரம் வாக்யம் ச்வபாகம் ததநந்தரம். 25

இப்படி நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக் கேட்டு, பசியாலே இளைத்திருக்கிற ப்ரஹ்மரக்ஷஸ்ஸானது இனிதாக ஒரு வார்த்தை சொல்லிற்று காணும்—என்கிறார்.

मोघं भाषसि चण्डाल पुनरेष्याम्यहं त्विति ।
को हि रक्षोमुखाद्भ्रष्टस्तन्मुखायाभिवर्तते ॥ २६ ॥

மோகம் பாஷஸி சண்டால புநரேஷ்யாம்யஹம் த்விதி
கோ ஹி ரக்ஷோமுகாத் ப்ரஷ்டஸ் தந்முகாயாபிவர்த்ததே. 26

வாராய் சண்டாளா! உன் ஜன்மத்துக் கீடாக இருந்தது நீ சொன்ன வார்த்தை. போய் மீண்டு வருகிறேனென்று நேராய் அஸத்யமே சொன்னாய். எவனாகிலும் ப்ரம்ம ரக்ஷஸ்ஸின் கையி லகப்பட்டு தப்பித்துக்கொண்டுபோய், மீண்டுவந்து அதன் கையிலகப் படுவனோ என்று சொல்லிற்றென்கிறார்.

बहवः सन्ति पन्थानो देशाश्च बहवस्तथा ।
आत्मदेशं परित्यज्य परेषां गन्तुमिच्छसि ॥ २७ ॥

பஹவ: ஸந்தி பந்தாநோ தேசாச்ச பஹவஸ் ததா
ஆத்மதேசம் பரித்யஜ்ய பரேஷாம் கந்து மிச்சஸி. 27

இவ்வழியொழிய பலவழிகளுண்டு. இத்தேசமொழிய பல தேசங்களுமுண்டு. உன்னுடைய தேசத்தைவிட்டு தேசாந்தரம் போவதாக நினைக்கிறாயென்று சொல்லிற்று—என்கிறார்.

स्वशरीरविनाशाय न चागच्छति कश्चन ।
रक्षसो मुखविभ्रष्टः पुनरागन्तुमिच्छसि ॥ २८ ॥

ஸ்வசரீரவிநாசாய ந சாகச்சதி கச்சந
ரக்ஷஸோ முகவிப்ரஷ்ட: புநராகந்து மிச்சஸி. 2

தனக்கு சரீரநாசம் பிறக்குமிடமறிந்திருக்கச் செய்தே, அந்த இடத்தைக் குறித்து யாரேனுமொருவர் வருவாருமுண்டோ! ரக்ஷஸ்ஸின் கையிலகப்பட்டுத் தப்பிப் போ[illegible] மீண்டு வருகிறேனென்று நேராக அஸத்யமே சொன்னாய்.

राक्षसस्य वचः श्रुत्वा चंडालो धर्मसंश्रितम् ।
उवाच मधुरं वाक्यं राक्षसं पिशिताशनम् ॥ २९ ॥

ராக்ஷஸஸ்ய வச: ச்ருத்வா சண்டாளோ தர்மஸம்ச்ரிதம்
உவாச மதுரம் வாக்யம் ராக்ஷஸம் பிசிதாசநம். 29

*இப்படி இந்த ரக்ஷஸ்ஸு சொன்ன வார்த்தையைக் கேட்டு, நம் பாடுவானும் இந்த ரக்ஷஸ்ஸைப் பார்த்து தர்ம ஸம்யுக்தமாகவும் இனிதாகவும் ஒரு வார்த்தை சொன்னான் காணும்—என்கிறார்.*

यद्यप्यहं हि चण्डालः पूर्वकर्मविदूषितः ।
प्राप्तोऽहं मानुषं भावं विदितेनान्तरात्मना ॥ ३० ॥

யத்யப்யஹம் ஹி சண்டால: பூர்வகர்மவிதூஷித:
ப்ராப்தோஹம் மாநுஷம் பாவம் விதிதேநாந்தராத்மநா. 30

*பூர்வ கர்ம தோஷத்தாலே இந்த சண்டால ஜன்மத்திலே பிறந்தேனாகிலும், பரமாத்மஜ்ஞாநமுண்டான படியினாலே ஒரு மனுஷ்யனுக் குண்டான ஜ்ஞாநம் எனக்குமுண்டு காண். ஆகையால், என்னுடைய வார்த்தையைக் கேளாய் என்று சொல்லுகிறான் காணும்—என்கிறார்.*

शृणु तत्समयं रक्षो येनागच्छाम्यहं पुनः ।
दूराज्जागरणं कृत्वा लोकनाथस्य तृप्तये ॥ ३१ ॥

ச்ருணு தத்ஸமயம் ரக்ஷோ யேநாகச்சாம்யஹம் புந:
துராஜ்ஜாகரணம் க்ருத்வா லோகநாதஸ்ய த்ருப்தயே. 31

*த்ரைலோக்ய நாதனை ஸர்வேச்வரனைத் திருப்பள்ளி யுணர்த்தி ஸமாப்தவ்ரதனாய்த் திரும்பவும் யாதொருபடி நான் மீள வருவேனோ, அதுக்கீடான ப்ரதிஜ்ஞைகளைப் பண்ணிக் கொடுக்கிறேன். அவற்றை நீ கேளாய் என்று சொன்னான் காணும் நம் பாடுவான்—என்கிறார்.*

सत्यमूलं जगत् सर्वं लोकः सत्ये प्रतिष्ठितः ।
नाहं मिथ्या प्रवक्ष्यामि सत्यमेव वदाम्यहम् ॥ ३२ ॥

ஸத்யமூலம் ஜகத் ஸர்வம் லோக: ஸ்த்யே ப்ரதிஷ்டித:
நாஹம் மித்த்யா ப்ரவக்ஷ்யாமி ஸத்யமேவ வதாம்யஹம். 32

*லோகமுண்டானதும் ஸத்யத்தாலே, லோகம் ப்ரதிஷ்டிதமாய் நின்றதும் ஸத்யத்தாலே. ஆகையால் நான் ஸத்யமே சொல்லுமித்தனை போக்கி, அஸத்ய மொருக்காலும் சொல்லேனென்றான் காணும்—என்கிறார்.*

अद्य मे समयस्तत्र ब्रह्मराक्षस तं शृणु ।
शपामि सत्येन गतो यद्यहं नागमे पुनः ॥ ३३ ॥

அத்ய மே ஸமயஸ்தத்ர ப்ரஹ்மராக்ஷஸ தம் ச்ருணு
சபாமி ஸத்யேந கதோ யத்யஹம் நாகமே புந:. 33

வாராய், ப்ரம்மராக்ஷஸனே! என்னுடைய ப்ரதிஜ்ஞையைக் கேளாய். யாவனொருவன் ஸர்வகாரணமான ஸத்யத்தைப் தப்புகிறானோ அவன் பாபத்தை அடையக் கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

यो गच्छेत् परदारांश्च काममोहप्रपीडितः ।

तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ३४ ॥

யோ கச்சேத் பரதாராம்ச்ச காமமோஹப்ரபீடித:

தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 34

யாவனொருவன் மன்மத பீடிதனாய்க் கொண்டு பரஸ்த்ரீ கமனம் பண்ணுகிறான், அவன் பாபத்தை அடையக் கடவேன், மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

पाकभेदं तु यः कुर्यादात्मनश्चोपभुञ्जतः ।

तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ३५ ॥

பாகபேதம் து ய: குர்யாதாத்மநச்சோபபுஞ்ஜத:

தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 35

யாவனொருவன் புஜிக்குமிடத்தில் தனக்கும் கூட புஜிக்கிறவர்களுக்கும் பாக பேதம் பண்ணி புஜிக்கிறான், அவன் பாபத்தை அடையக் கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

दत्वा वै भूमिदानं तु पुनराच्छिन्दतीह यः ।

तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ३६ ॥

தத்வா வை பூமிதாநம் து புநராச்சிந்ததீஹ ய:

தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 36

யாவனொருவன் ஒரு ப்ராஹ்மணனுக்கு பூமிதானம் பண்ணித் திரும்பவும் அந்த பூமியை அபஹரிக்கிறான், அவன் பாபத்தை அடையக்கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

स्त्रियं भुक्त्वा रूपवतीं पुनर्यस्तां विनिन्दति ।

तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ३७ ॥

ஸ்த்ரியம் புக்த்வா ரூபவதீம் புநர் யஸ்தாம் விநிந்ததி

தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 37

யாவனொருவன் ரூபவதியான ஸ்த்ரீயை யௌவன காலத்தில் அனுபவித்துப் பின்பு, அவளுக்கு தோஷத்தைச் சொல்லி விட்டுவிடுகிறான், அவன் பாபத்தை அடையக் கடவேன், மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

योऽमावास्यां विशालाक्षि श्राद्धं कृत्वा स्त्रियं व्रजेत् ।
तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ३८ ॥

யோமாவாஸ்யாம் விசாலாக்ஷி ச்ராத்தம் க்ருத்வா ஸ்த்ரியம் வ்ரஜேத்
தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 38

*யாவனொருவன் அமாவாஸ்யையன்று ச்ராத்தம் பண்ணி ஸ்த்ரீகமனம் பண்ணுகிறான், அவன் பாபத்தை அடையக் கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.*

भुक्त्वा परस्य चान्नानि यस्तं निन्दति निर्घृणः ।
तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ३९ ॥

புக்த்வா பரஸ்ய சாந்நாநி யஸ்தம் நிந்ததி நிர்க்ருண:
தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 39

*யாவனொருவன் பரனுடைய அன்னத்தை நன்றாக புஜித்து, தயையில்லாதவனாய்த் திரும்பவும் அவனை தூஷிக்கிறான், அவன்பாபத்தை அடையக் கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.*

यस्तु कन्यां ददामीति पुनस्तां न प्रयच्छति ।
तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ४० ॥

யஸ்து கந்யாம் ததாமீதி புநஸ் தாம் ந ப்ரயச்சதி
தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 40

*யாவனொருவன் கன்யையைக் கொடுக்கிறேனென்று சொல்லித் திரும்பவும் கொடாமல் போகிறான், அவன்பாபத்தை அடையக்கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.*

षष्ठ्यष्टम्योरमावास्याचतुर्दश्योश्च नित्यशः ।
अस्नातानां गतिं गच्छे यद्यहं नागमे पुनः ॥ ४१ ॥

ஷஷ்ட்யஷ்டம்யோ ரமாவாஸ்யா சதுர்தச்யோச்ச நித்யச:
அஸ்நாதாநாம் கதிம் கச்சே யத்யஹம் நாகமே புந:. 41

*யாவனொருவன் ஷஷ்டீ அஷ்டமீ அமாவாஸ்யை சதுர்தசி இந்த திதிகளில் ஸ்நானம் பண்ணாதே புஜிக்கிறான், அவன்பாபத்தை அடையக்கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.*

दास्यामीति प्रतिश्रुत्य न च यस्तत्प्रयच्छति ।
गतिं तस्य प्रपद्ये वै यद्यहं नागमे पुनः ॥ ४२ ॥

தாஸ்யாமீதி ப்ரதிச்ருத்ய ந ச யஸ் தத் ப்ரயச்சதி
கதிம் தஸ்ய ப்ரபத்யே வை யத்யஹம் நாகமே புந:. 42

யாவனொருவன் ஒருவனுக்கு ஒன்றைக் கொடுக்கிறேனென்று சொல்லித் திரும்பவும் அதைக் கொடாமல் போகிறான், அவன் பாபத்தை அடையக் கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

मित्रभार्यां तु यो गच्छेत् कामबाणवशानुगः ।
तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ४३ ॥

மித்ரபார்யாம் து யோ கச்சேத் காமபாணவசாநுக:
தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 43

*மிதாத் த்ராயத இதி மித்ரம்—என்று சொல்லுகிறபடியே மஹோபகாரகனான மித்ரனுடைய பார்யையை வசீகரிக்கிறான் யாவனொருவன், அவனுடைய பாபத்தை அனுபவிக்கக் கடவேனாகிறேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

गुरुपत्नीं राजपत्नीं ये तु गच्छन्ति मोहिताः ।
तेषां गतिं प्रपद्ये वै यद्यहं नागमे पुनः ॥ ४४ ॥

குருபத்நீம் ராஜபத்நீம் யே து கச்சந்தி மோஹிதா:.
தேஷாம் கதிம் ப்ரபத்யே வை யத்யஹம் நாகமே புந: 44

யாவர்சில பேர்கள் தங்களுக்கு ஆமுஷ்மிக ப்ரதாதாவான ஆசார்யனுடைய பத்நியையும், ஐஹிகப்ரதாதாவான ராஜாவினுடைய பத்நியையும் காமத்தினாலே அனுபவிக்கிறார்களோ, அவர்கள் பாபத்தை அடையக்கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

यो वै दारद्वयं कृत्वा एकस्यां प्रीतिमान् भवेत् ।
गतिं तस्य प्रपद्ये वै यद्यहं नागमे पुनः ॥ ४५ ॥

யோ வை தாரத்வயம் க்ருத்வா ஏகஸ்யாம் ப்ரீதிமாந் பவேத்
கதிம் தஸ்ய ப்ரபத்யே வை யத்யஹம் நாகமே புந:. 45

யாவனொருவன் இரண்டு ஸ்த்ரீகளை விவாஹம் பண்ணி, ஒரு ஸ்த்ரீயை உபேக்ஷை பண்ணி மற்றொரு ஸ்த்ரீயை ஸந்தோஷத்தோடே அனுபவிக்கிறான், அவன் பாபத்தை அடையக்கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

अनन्यशरणां भार्यां यौवने यः परित्यजेत् ।
तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ४६ ॥

அநந்யசரணாம் பார்யாம் யௌவநே ய: பரித்யஜேத்
தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 46

யாவனொருவன் அநந்யகதியாயும் பதிவ்ரதையாயுமிருக்கிற ஸ்த்ரீயை யௌவனத்திலே த்யஜிக்கிறான், அவன்பாபத்தை அடையக் கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.

गोकुलस्य तृषार्तस्य जलार्थमभिधावतः ।
विघ्नमाचरते यस्तु तत्पापं स्यादनागमे ॥ ४७ ॥

கோகுலஸ்ய த்ருஷார்த்தஸ்ய ஜலார்த்த மபிதாவத:
விக்ந மாசரதே யஸ்து தத்பாபம் ஸ்யாதநாகமே. 47

*யாவனொருவன் பஹுதாஹத்தினாலே மிகவும் பீடிதமாய் ஜலபாநார்த்தம் வேகத்தோடே ஓடி வருகிற பசுக்கூட்டத்துக்கு ஜலபான விக்னம் பண்ணுகிறான், அவன்பாபத்தை அடையக்கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.*

ब्रह्मघ्ने च सुरापे च चोरे भग्नव्रते तथा ।
या गतिर्विहिता सद्भिस्तत्पापं स्यादनागमे ॥ ४८ ॥

ப்ரஹ்மக்நே ச ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா
யா கதிர்விஹிதா ஸத்பிஸ் தத்பாபம் ஸ்யாதநாகமே. 48

*யாவனொருவன் ப்ரஹ்மஹத்யை பண்ணுகிறான், யாவனொருவன் மத்யபானம் பண்ணுகிறான், யாவனொருவன் ஸ்வர்ணஸ்தேயம் பண்ணுகிறான், யாவனொருவன் வ்ரத பங்கம் பண்ணுகிறான்—இப்படிப் பட்ட மஹா பதிதர்களுக்குப் பெரியோர்களாலே யாதொருகதி சொல்லப்படுகிறதோ, அப்படிக்கொத்த க்ரூரமான பாபத்தை அடையக் கடவேன் மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.*

वासुदेवं परित्यज्य येऽन्यं देवमुपासते ।
तेषां गतिं प्रपद्ये वै यद्यहं नागमे पुनः ॥ ४९ ॥

வாஸுதேவம் பரித்யஜ்ய யேந்யம் தேவமுபாஸதே
தேஷாம் கதிம் ப்ரபத்யே வை யத்யஹம் நாகமே புந:. 49

*யாவர் சிலபேர்கள் ஆச்ரிதஸுலபனாய் ஸர்வவ்யாபியான ஸ்ரீ வாஸுதேவனை ஆராதனம் பண்ணாமல் இதர தேவதைகளை உபாஸிக்கிறார்கள், அவர்களுடைய துர்க் கதியை அடையக்கடவேன், மீளவும் வந்திலேனாகில்—என்கிறான்.*

नारायणमथान्यैस्तु देवैस्तुल्यं करोति यः ।
तस्य पापेन लिप्येयं यद्यहं नागमे पुनः ॥ ५० ॥

நாராயணமதாந்யைஸ் து தேவைஸ் துல்யம் கரோதி ய:
தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:. 50

*ஸர்வஸ்மாத்பரனாய், ஸர்வாந்தர்யாமியாய், ஸர்வகர்ம ஸமாராத்யனாய், முமுக்ஷூ பாஸ்யனாய், மோக்ஷப்ரதனாய், முக்த ப்ராப்யனான ஸர்வேச்வரனையும்—*

*"காணிலுமுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்*
*பேணிலும் வரந்தரும் மிடுக்கிலாத தேவராய்"*

கர்மபரவசரான வ்யதிரிக்த தேவதைகளையும் ஸமமாக எண்ணுகிறான் யாவனொருவன்,

அவனைப் போலே நித்ய ஸம்ஸாரியாகக்கடவேன் மீளவும் வந்திலேனாகிலென்று—இப்படி சபதங்களைப் பண்ணினான்காணும் நம்பாடுவான்—என்று பூமிப் பிராட்டியைப் பார்த்து ஸ்ரீவராஹநாயனார் அருளிச் செய்தார்.

चण्डालवचनं श्रुत्वा परितुष्टस्तु राक्षसः ।
उवाच मधुरं वाक्यं गच्छ शीघ्रं नमोऽस्तु ते ॥ ५१ ॥

சண்டாலவசநம் ச்ருத்வா பரிதுஷ்டஸ்து ராக்ஷஸ:
உவாச மதுரம் வாக்யம் கச்ச சீக்ரம் நமோஸ்து தே. 51

இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணின நம்பாடுவானைப் பார்த்து ப்ரஹ்மரக்ஷஸ்ஸானது ஸந்துஷ்டமாய் நமஸ்கரித்து, இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணின நீ கடுகப் போய் வ்ரதத்தைத் தலைக்கட்டித் திரும்பிவரக் கடவாய் என்று மதுரமாக வார்த்தை சொல்லிற்று.

राक्षसेन विनिर्मुक्तश्चण्डालः कृतनिश्चयः ।
पुनर्गायति मह्यं वै मम भक्त्या व्यवस्थितः ॥ ५२ ॥

ராக்ஷஸேந விநிர்முக்தச்சண்டால: க்ருதநிச்சய:
புநர்காயதி மஹ்யம் வை மம பக்த்யா வ்யவஸ்தித:. 52

ராக்ஷஸனாலே விடப்பட்ட நம்பாடுவான் ஸம்ஸாரத்தில் நின்றும் முக்தனானவன் வருமாப்போலே வந்து, முன்பு போலே நமக்குப் பாடினான் காணும்—என்கிறார்.

अथ प्रभाते विमले विनिवृत्ते तु जागरे ।
नमो नारायणेत्युक्त्वा श्वपाकः पुनरागमत् ॥ ५३ ॥

அத ப்ரபாதே விமலே விநிவ்ருத்தே து ஜாகரே
நமோ நாராயணேத்யுக்த்வா ச்வபாக: புநராகமத் 53

அநந்தரம் பொழுதுவிடிந்து ஜாகர வ்ரதமும் தலைக்கட்டினவளவிலே, நம் பக்கலிலே ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணி, தனக்கு த்யாஜ்யமான சரீரம் கழிகையிலுண்டான ஆசையாலே கடுக மீண்டான் காணும் நம்பாடுவான்—என்றருளிச் செய்கிறார்.

गच्छतस्त्वरितं तस्य पुरुषः पुरतः स्थितः ।
उवाच मधुरं वाक्यं श्वपाकं तदनन्तरम् ॥ ५४ ॥

கச்சதஸ் த்வரிதம் தஸ்ய புருஷ: புரத; ஸ்தித:
உவாச மதுரம் வாக்யம் ச்வபாகம் ததநந்தரம்.

நம்பாடுவான் மீண்டு போகிறவளவில் நம்பக்கல் பாட வந்த கடுமையைக் காட்டில் இரட்டித்தகடுமையோடே போகப்புக்கான். இப்படிப் போகிறவன் முன்பே ஒரு புருஷனானவன் வந்துநின்று, நம்பாடுவானைப் பார்த்து, இனிதாக ஒரு வார்த்தை சொன்னான் காணும்.

कुतो गच्छसि चण्डाल द्रुतं गमननिश्चितम् ।
एतदाचक्ष्व तत्त्वेन यत्र ते वर्तते मनः ॥ ५५ ॥

குதோ கச்சஸி சண்டால த்ருதம் கமநநிச்சிதம்
ஏததாசக்ஷ்வ தத்வேந யத்ர தே வர்த்ததே மந:. 55

உன் நடையைப் பார்த்தவாறே முன்புபோலன்றிக்கே அறக் கடுகியிருந்தது! நீ இப்படி எங்கேறப் போகிறது? இதை எனக்கு உண்மையாகச் சொல்லவேணுமென்ருன்—அந்தப் புருஷன்.

तस्य तद्वचनं श्रुत्वा श्वपाकः सत्यसंमतः ।
उवाच मधुरं वाक्यं पुरुषं तदनन्तरम् ॥ ५६ ॥

தஸ்ய தத் வசநம் ச்ருத்வா ச்வபாக: ஸத்யஸம்மத:
உவாச மதுரம் வாக்யம் புருஷம் ததநந்தரம். 56

ஸத்யப்ரதிஜ்ஞனை நம்பாடுவான் அந்தப் புருஷன் வார்த்தையைக் கேட்டு, அவனைப்பார்த்து மதுரமாக ஒரு வார்த்தை சொன்ஞன் காணும்—என்கிருர்.

समयो मे कृतो यत्र ब्रह्मराक्षससन्निधौ ।
तत्राहं गन्तुमिच्छामि यत्रासौ ब्रह्मराक्षसः ॥ ५७ ॥

ஸமயோ மே க்ருதோ யத்ர ப்ரஹ்மராக்ஷஸஸந்நிதெள
தத்ராஹம் கந்துமிச்சாமி யத்ராஸெள ப்ரஹ்மராக்ஷஸ:. 57

ப்ரஹ்மராக்ஷஸ்ஸின் முன்பே சபதங்களைப் பண்ணிப் போந்தேன். அந்த ப்ரதிஜ்ஞை தப்பாமல் யாதொரு இடத்திலே ப்ரஹ்மராக்ஷஸன் நின்ருன் அங்கேறப் போகிறேன். முன்பு நின்றவிடத்தில் கண்டிலேஞகில், அவன் நின்றவிடந்தேடிப் போகக் கடவேனென்கிருன் நம்பாடுவான்— என்றருளிச் செய்கிருர்.

श्वपाकवचनं श्रुत्वा पुरुषो भावशोधकः ।
उवाच मधुरं वाक्यं श्वपाकं तदनन्तरम् ॥ ५८ ॥

ச்வபாகவசநம் ச்ருத்வா புருஷோ பாவசோதக:
உவாச மதுரம் வாக்யம் ச்வபாகம் ததநந்தரம் 58

இப்படி நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக் கேட்டு, அந்தப் புருஷன் இவனுடைய மனஸ்ஸை சோதிக்கைக்காக ஒரு மதுரமான வார்த்தை சொன்ஞன் காணும்—என்கிருர்.

न तत्र गच्छ चंडाल मार्गेणानेन सुव्रत ।
तत्रासौ राक्षसः पापः पिशिताशी दुरासदः ॥ ५९ ॥

ந தத்ர கச்ச சண்டால மார்க்கேணநேந ஸுவ்ரத
தத்ராஸௌ ராக்ஷஸ: பாப: பிசிதாசீ துராஸத:. 59

அங்கே ஜாத்யா ராக்ஷஸனுமாய், அதிலே விபீஷணனைப்போலே தர்மாத்மாவா யிருக்கையன்றிக்கே பாபிஷ்டனுமாய், அதிலே சரீரம் கொண்டு தப்பிப்போகையன்றிக்கே மாம்ஸ பக்ஷகனுமாய், அவனைக் கொன்று போகவொண்ணுதபடி பலவானுயிருப்பான் ஒருத்தன். அங்கு நீ போகக்கடவையல்லை காண்—என்று நம்பாடுவானைப் பார்த்து இவன் மனஸ்ஸை சோதிக்க வார்த்தை சொன்னுன் காணும் அந்தப் புருஷன்.

पुरुषस्य वचः श्रुत्वा श्वपाकः सत्यसङ्गरः ।
मरणं तत्र निश्चित्य मधुरं वाक्यमब्रवीत् ॥ ६० ॥

புருஷஸ்ய வச: ச்ருத்வா ச்வபாக: ஸத்யஸங்கர:
மரணம் தத்ர நிச்சித்ய மதுரம் வாக்யமப்ரவீத். 60

அந்தப் புருஷன் சொன்ன வார்த்தையைக் கேட்டு ஸத்யவாதியான நம்பாடுவான் ஸத்யத்தை விடுவதைக் காட்டிலும் ப்ராணனை விடுவதே ச்ரேஷ்டமாக நினைத்து, மதுரமாக வொரு வார்த்தை சொன்னுன்காணுமென்கிருர்.

नाहमेवं करिष्यामि यन्मां त्वं परिपृच्छसि ।
अहं सत्येऽप्रवृत्तो वै शीलं सत्ये प्रतिष्ठितम् ॥ ६१ ॥

நாஹமேவம் கரிஷ்யாமி யந்மாம் த்வம் பரிப்ருச்சஸி
அஹம் ஸத்யே ப்ரவ்ருத்தோ வை சீலம் ஸத்யே ப்ரதிஷ்டிதம். 61

வாராய் புருஷனே! நான் ஸத்யம் தப்பாதே யிருப்பவன்; நான் ஸத்யத்தைத் தப்பினுனும், என் ஸ்வபாவம் ஸத்யத்தைத் தப்பாதுகாண்—என்ருன் காணும் நம்பாடுவான்.

ततः स पद्मपत्राक्षः श्वपाकं प्रत्युवाच ह ।
यद्येवं निश्चयस्तात! स्वस्ति तेऽस्तु गमिष्यतः ॥ ६२ ॥

தத: ஸ பத்மபத்ராக்ஷ: ச்வபாகம் ப்ரத்யுவாச ஹ
யத்யேவம் நிச்சயஸ்தாத ஸ்வஸ்தி தேஸ்து கமிஷ்யத:. 62

இப்படிச் சொன்ன நம்பாடுவானைப் பார்த்து அந்தப் புருஷனும்—இவன் ப்ராணனைவிட்டும் ஸத்யத்தை ரக்ஷிக்கக் கடவேனென்று சொன்னபடியாலே ப்ரீயப்பட்டு— "அமலங்களாக விழிக்கும்" என்று சொல்லுகிறபடியே நம்பாடுவானைப் பாடவரக் காட்டின ப்ரம்மரக்ஷஸ்ஸினுடைய ஆபத்தும் போகும்படி பூர்ணகடாக்ஷம் பண்ணி "உனக்கு மங்கள முண்டாகக்கடவது, போகாய்" என்று அனுப்பினுன் காணும். அந்தப் புருஷன் யாரோ என்று ஸந்தேஹியாதே,

*மஹாவராஹ: ஸ்புடபத்மலோசந:* என்றும்
*புருஷ: புஷ்கரேக்ஷண:* என்றும்

சொல்லுகிறபடியே இருவரு மொருவராகக் கொள்ளீரென்று அருளிச்செய்கிருர்.

ब्रह्मरक्षोन्तिकं प्राप्य सत्येऽसौ कृतनिश्चयः ।
उवाच मधुरं वाक्यं राक्षसं पिशिताशनम् ॥ ६३ ॥

ப்ரஹ்மரக்ஷோந்திகம் ப்ராப்ய ஸத்யேஸௌ க்ருதநிச்சய:
உவாச மதுரம் வாக்யம் ராக்ஷஸம் பிசிதாசநம் 63

*அந்த புருஷன் விடைகொடுக்க, நம்பாடுவானும் அந்த ப்ரம்ம ரக்ஷஸ்ஸு இருக்கிற இடம் தேடிச்சென்று ரக்ஷஸ்ஸைக் கிட்டி இனிதாக ஒரு வார்த்தை சொன்னான்.*

भवता समनुज्ञातो गानं कृत्वा यथेप्सया ।
विष्णवे लोकनाथाय मम पूर्णो मनोरथः ॥ ६४ ॥
एतानि मम चांगानि भक्षयस्व यथेच्छया ।

பவதா ஸம்நுஜ்ஞாதோ காநம் க்ருத்வா யதேப்ஸயா
விஷ்ணவே லோகநாதாய மம பூர்ணோ மநோரத: 64
ஏதாநி மம சாங்காநி பக்ஷயஸ்வ யதேச்சயா

*வாராய் ப்ரம்மரக்ஷஸ்ஸே! நீ அனுஜ்ஞை பண்ணிப்போன நான் ப்ராம்மணனுஜ்ஞைபெற்றுப் போனவனைகையாலே எனக்கு வேண்டியபடி ஸர்வேச்வரனை மஹாவிஷ்ணுவான அழகிய நம்பியைப் பாடி உகப்பித்துப் பூர்ணமனோரதனானேன். நீயும் என் சரீரத்தில் ருதிரமாம்ஸாதிகளைக் கொண்டு பூர்ணமனோரதனாகா யென்றான் நம்பாடுவான்.*

श्वपाकवचनं श्रुत्वा ब्रह्मरक्षो भयानकम् ॥ ६५ ॥
उवाच मधुरं वाक्यं श्वपाकं संशितव्रतम् ।

ச்வபாகவசநம் ச்ருத்வா ப்ரஹ்மரக்ஷோ பயாநகம் 65
உவாச மதுரம் வாக்யம் ச்வபாகம் ஸம்சிதவ்ரதம்

*அத்யந்தம் பயங்கரமாயிருக்கிற ப்ரம்மரக்ஷஸ்ஸானது நம்பாடுவான் வார்த்தையைக் கேட்டு, நம்பாடுவானைப் பார்த்து மதுரமாக ஒரு வார்த்தை சொல்லிற்று.*

त्वमद्य रात्रौ चण्डाल विष्णोर्जागरणं प्रति ॥ ६६ ॥
फलं गीतस्य मे देहि जीवितं यदिचेच्छसि ।

த்வமத்ய ராத்ரௌ சண்டால விஷ்ணோர்ஜாகரணம் ப்ரதி 66
பலம் கீதஸ்ய மே தேஹி ஜீவிதம் யதிசேச்சஸி

*வாராய் மஹாநுபாவனே! ப்ராணனை விடுவதாக வந்த உனக்கு ப்ராணனோடே போகவேண்டியிருக்கில், இன்றிரவு ஸர்வேச்வரனுக்குப் பாடினபாட்டின் பலத்தைத் தந்து உன் ப்ராணனோடே போகா யென்றான் அந்த ராக்ஷஸன்.*

ब्रह्मरक्षोवचः श्रुत्वा श्वपाकः पुनरब्रवीत् ॥ ६७ ॥

ப்ரஹ்மரக்ஷோவச: ச்ருத்வா ச்வபாக: புநரப்ரவீத் 67

இப்படி ப்ரம்மரக்ஷஸ்ஸின் வார்த்தையைக் கேட்டு நம்பாடுவானும் மற்றொரு வார்த்தை சொன்னான்.

यत् त्वया भाषितं पूर्वं मया सत्यं च यत्कृतम् ।
भक्षयस्व यथेच्छं मां दद्यां गीतफलं न तु ॥ ६८ ॥

யத் த்வயா பாஷிதம் பூர்வம் மயா ஸத்யஞ் ச யத் க்ருதம்
பக்ஷயஸ்ய யதேச்சம் மாம் தத்யாம் கீதபலம் ந து. 68

நீ முன்பு சொன்னாப்போலே நானும் தப்பாமல் செய்ததால் நீயுமப்படியே என்னுடைய சரீரத்தை பக்ஷிக்குமத்தனைபோக்கி, நான் கீதபலத்தைத் தருவதில்லை என்றான் நம்பாடுவான்.

चण्डालस्य वचः श्रुत्वा हेतुयुक्तमनन्तरम् ।
उवाच मधुरं वाक्यं चण्डालं ब्रह्मराक्षसः ॥ ६९ ॥

சண்டாலஸ்ய வச: ச்ருத்வா ஹேதுயுக்த மநந்தரம்
உவாச மதுரம் வாக்யம் சண்டாலம் ப்ரஹ்மராக்ஷஸ:. 69

ராக்ஷஸனானவன் நம்பாடுவான் காரணத்துடன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மறுபடியும் இனிதாக ஒரு வார்த்தை சொன்னான்.

अथवाऽर्धं तु मे देहि पुण्यं गीतस्य यत् फलम् ।
ततो मोक्ष्यामि कल्याण भक्षादस्माद्विभीषणात् ॥ ७० ॥

அதவா அர்த்தம் து மே தேஹி புண்யம் கீதஸ்ய யத் பலம்
ததோ மோக்ஷ்யாமி கல்யாண பக்ஷாதஸ்மாத் விபீஷணாத். 70

கீதபலமெல்லாம் தாராவிடினும், கீதபலத்தில் பாதியாகிலும் தந்து, பயங்கரமான பக்ஷணத்தில் நின்றும் தப்பிப்போனாலாகாதோ மஹாநுபாவனே !—என்று சொல்லிற்றாக் காணுமென்கிறார்.

ब्रह्मरक्षोवचः श्रुत्वा श्वपाकः संशितव्रतः ।
वाणीं श्लक्ष्णां समादाय ब्रह्मराक्षसमब्रवीत् ॥ ७१ ॥

ப்ரஹ்மரக்ஷோவச: ச்ருத்வா ச்வபாக: ஸம்சிதவ்ரத:
வாணீம் ச்லக்ஷ்ணம் ஸமாதாய ப்ரஹ்மராக்ஷஸ மப்ரவீத். 71

ப்ரம்மரக்ஷஸ்ஸின் வார்த்தையைக்கேட்டு நம்பாடுவானும் இனிதாக ஒரு வார்த்தை சொன்னான்.

भक्षयामीति संश्रुत्य गीतमन्यत् किमिच्छसि ।

பக்ஷயாமீதி ஸம்ச்ருத்ய கீதமந்யத் கிமிச்சஸி ?

என்னுடைய சரீரத்தை பக்ஷிக்கக் கடவேனென்று அறுதியிட்ட நீ கீதார்த்த பலத்தைக்கேட்கிறாய் ; அதுவும் தருவதில்லை—என்றறுதியிட்டான் நம்பாடுவான்.

श्वपाकस्य वचः श्रुत्वा ब्रह्मरक्षो भयावहम् ॥ ७२ ॥

उवाच मधुरं वाक्यं श्वपाकं संशितव्रतः ।

एकयामस्य मे देहि पुण्यं गीतस्य यत्फलम् ॥ ७३ ॥

ततो यास्यसि कल्याण संगमं पुत्रदारकैः ।

ச்வபாகஸ்ய வச: ச்ருத்வா ப்ரஹ்மரக்ஷோ பயாவஹம். 72

உவாச மதுரம் வாக்யம் ச்வபாகம் ஸம்சிதவ்ரதம்

ஏக யாமஸ்ய மே தேஹி புண்யம் கீதஸ்ய யத் பலம். 73

ததோ யாஸ்யஸி கல்யாண ஸங்கமம் புத்ரதாரகை :

*அநந்தரம் க்ரூரக்ருத்யனான ப்ரஹ்மராக்ஷஸனும் நம்பாடுவானைப் பார்த்து ஒருயாமத்தில் பாடின பாட்டின் பலமாகிலும் தந்து, உன் புத்ரதாராதிகளோடே கூடக்கடவாய்—என்றான்.*

श्रुत्वा राक्षसवाक्यानि चण्डालो गीतलालसः ॥ ७४ ॥

उवाच मधुरं वाक्यं राक्षसं कृतनिश्चयः ।

ச்ருத்வா ராக்ஷஸவாக்யாநி சண்டாலோ கீதலாலஸ:. 74

உவாச மதுரம் வாக்யம் ராக்ஷஸம் க்ருதநிச்சய :

*இப்படிச் சொன்ன ரக்ஷஸ்ஸின் வார்த்தையைக் கேட்டு த்ருடவ்ரதனாய் தீரனாயுமிருக்கிற நம்பாடுவானும் ரக்ஷஸ்ஸைப் பார்த்து இனிதாக ஒரு வார்த்தை சொன்னான்.*

न यामस्य फलं दद्यां ब्रह्मरक्षस्तवेप्सितम् ॥ ७५ ॥

पिबस्व शोणितं मह्यं यत् त्वया पूर्वभाषितम् ।

ந யாமஸ்ய பலம் தத்யாம் ப்ரஹ்மரக்ஷஸ் தவேப்ஸிதம் 75

பிபஸ்வ சோணிதம் மஹ்யம் யத் த்வயா பூர்வ பாஷிதம்

*வாராய் ரக்ஷஸ்ஸே! ஒரு யாமத்தில் பாடின பலமும் தருவதில்லை. என்னிடத்தில் பாட்டுக்குப் போலே ராகமுண்டாயிருக்கிற என்னுடைய ரக்தத்தைப் பானம் பண்ணு மத்தனை போக்கி, நான் பாடல் பலம் தருவதில்லை என்றான்—நம்பாடுவான்.*

श्वपाकस्य वचः श्रुत्वा राक्षसः पिशिताशनः ॥ ७६ ॥

सत्यवन्तं गुणज्ञञ्च चंडालमिदमब्रवीत् ।

ச்வபாகஸ்ய வச: ச்ருத்வா ராக்ஷஸ : பிசிதாசந:, 76

ஸத்யவந்தம் குணஜ்ஞம் ச சண்டாலமிதமப்ரவீத்

*இப்படி நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக் கேட்டு, இவன் உயிரை மாறிக் கொடுத்தும் ஸத்யம் தப்பாமல் நின்றவனாகையாலும், ப்ராணனிற் காட்டிலும் பாட்டினுடைய வைபவத்தை யறிந்தவனாகையாலும், இவன் ஸர்வத்தினுடைய வைஷம்யத்தையு*

மறியுமென்றறுதியிட்டு ப்ரம்ம ராக்ஷஸன் நம்பாடுவானைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னான்,

एकं गीतस्य मे देहि यत् त्वया विष्णुसंसदि ॥ ७७ ॥

निग्रहात्तारयास्माद्वै तेन गीतफलेन माम् ।

एवमुक्त्वा तु चंडालं राक्षसश्शरणं गतः ॥ ७८ ॥

ஏகம் கீதஸ்ய மே தேஹி யத் த்வயா விஷ்ணுஸம்ஸதி. 77

நிக்ரஹாத் தாரயாஸ்மாத்வை தேந கீதபலேந மாம்

ஏவமுக்த்வாது சண்டாலம் ராக்ஷஸ: சரணம் கத:. 78

வாராய் மஹாநுபாவனே! இன்று நீ விஷ்ணு ஸன்னிதியில் பாடின பாட்டில் ஒரு பாட்டின் பலத்தையாகிலும் கொடுத்து என்னை இந்த ராக்ஷஸ ஜன்மத்தில் நின்றும் உத்தரிப்பிக்கவேணுமென்று சொல்லி, ரக்ஷஸ்ஸு நம்பாடுவானை சரணம் புகுந்தது காணு மென்கிறார்.

श्रुत्वा राक्षसवाक्यानि श्वपाकः संशितव्रतः ।

उवाच मधुरं वाक्यं राक्षसं पिशिताशनम् ॥ ७९ ॥

ச்ருத்வா ராக்ஷஸ வாக்யாதி ச்வபாக: ஸம்சிதவ்ரத:

உவாச மதுரம் வாக்யம் ராக்ஷஸம் பிசிதாசநம். 79

இப்படி வெகுவிதமாக ப்ரார்த்தித்துச் சொன்ன ரக்ஷஸ்ஸின் வார்த்தைகளை ஸத்ய ப்ரதிஜ்ஞனான நம்பாடுவான் கேட்டு, ரக்ஷஸ்ஸைப் பார்த்து மதுரமாக ஒரு வார்த்தை சொன்னான் காணுமென்கிறார்.

किं त्वया दुष्कृतं कर्म कृतपूर्वं तु राक्षस! ।

कर्मणो यस्य दोषेण राक्षसीं योनिमाश्रितः ॥ ८० ॥

கிம் த்வயா துஷ்க்ருதம் கர்ம க்ருதபூர்வம் து ராக்ஷஸ

கர்மணோ யஸ்ய தோஷேண ராக்ஷஸீம் யோநிமாச்ரித: 80

இப்படி சரணாகதனான ரக்ஷஸ்ஸைப் பார்த்து நீ ராக்ஷஸயோனியில் பிறக்கைக்கு என்ன பாபத்தைப் பண்ணினாயென்று கேட்டான் நம்பாடுவான்.

एवमुक्तः श्वपाकेन पूर्ववृत्तमनुस्मरन् ।

राक्षसः शरणङ्गत्वा श्वपाकमिदमब्रवीत् ॥ ८१ ॥

ஏவமுக்த: ச்வபாகேந பூர்வவ்ருத்தமநுஸ்மரந்

ராக்ஷஸ: சரணம் கத்வா ச்வபாகமிதமப்ரவீத் 81

இந்தப்படிக்கு நம்பாடுவானாலே கேட்கப்பட்டதாய் பூர்வவ்ருத்த ஸ்மரணம் வந்ததான ரக்ஷஸ்ஸானது நம்பாடுவானை சரணாகதி பண்ணி ஒரு வார்த்தை சொல்லிற்று காணுமென்கிறார்.

नाम्ना वै सोमशर्माऽहं चरको ब्रह्मयोनिजः ।
सूत्रमन्त्रपरिभ्रष्टो यूपकर्मण्यधिष्ठितः ॥ ८२ ॥

நாம்நா வை ஸோமசர்மாஹம் சரகோ ப்ரஹ்மயோநிஜ:
ஸூத்ரமந்த்ரபரிப்ரஷ்டோ யூபகர்மண்யதிஷ்டித:. 82

*வாராய் மஹாநுபாவனே! பூர்வஜன்மத்திலே நான் ஸோமசர்மா என்றொரு ப்ராஹ்மணனாய் சரககோத்ரோத்பவனாய்ப் பிறந்து, ஸூத்ரமந்த்ர பரிப்ரஷ்டனாய் யாகம் பண்ண வேணுமென்று உபக்ரமித்தேன்-என்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொல்லிற்று காணுமென்கிறார்.*

ततोऽहं कारये यज्ञं लोभमोहप्रपीडितः ।
यज्ञे प्रवर्तमाने तु शूलदोषस्त्वजायत ॥ ८३ ॥

ததோஹம் காரயே யஜ்ஞம் லோபமோஹ ப்ரபீடித:
யஜ்ஞே ப்ரவர்த்தமாநே து சூலதோஷஸ்த்வஜாயத. 83

*அர்த்தலோப மோஹத்தினாலே யஜ்ஞம் பண்ணினேன். அந்த யஜ்ஞத்திலே மஹத்தான சூலதோஷ முண்டாச்சுதென்று சொல்லிற்று காணுமென்கிறார்.*

अथ पञ्चमरात्रे तु असमाप्ते क्रतावहम् ।
अकृत्वा विपुलं कर्म ततः पञ्चत्वमागतः ॥ ८४ ॥

அத பஞ்சமராத்ரே து, அஸமாப்தே க்ரதாவஹம்
அக்ருத்வா விபுலம் கர்ம தத: பஞ்சத்வ மாகத:. 84

*யஜ்ஞம் தொடங்கி அஞ்சு நாளான பிற்பாடு யாகஸமாப்தி யாகாமலிருக்கச்செய்தே நான் மரணத்தை யடைந்தேன் என்றது காண் என்கிறார்.*

तस्य यज्ञस्य दोषेण मातङ्ग शृणु यन्मम ।
जातोऽस्मि राक्षसस्तत्र ब्राह्मणो ब्रह्मराक्षसः ॥ ८५ ॥

தஸ்ய யஜ்ஞஸ்ய தோஷேண மாதங்க ச்ருணு யந்மம
ஜாதோஸ்மி ராக்ஷஸஸ்தத்ர ப்ராஹ்மணோ ப்ரஹ்மராக்ஷஸ:. 85

*வாராய் மஹாநுபாவனே! கேள். அந்த யாகதோஷத்தினாலே நான் ப்ரம்மரக்ஷஸ்ஸாக வந்து பிறந்தேன்—என்றான் காணுமென்கிறார்.*

एवं तु यज्ञदोषेण वपुः प्राप्तमिदं मम ।
इत्युक्त्वा तु तदा रक्षः श्वपाकं शरणं गतम् ॥ ८६ ॥

ஏவம்து யஜ்ஞதோஷேண வபு: ப்ராப்தமிதம் மம
இத்யுக்த்வா து ததா ரக்ஷ: ச்வபாகம் சரணம் கதம். 86

*இப்படி யஜ்ஞதோஷத்தினாலே இப்படிப்பட்ட ரக்ஷச்சரீரத்தை அடைந்தேனென்று சொல்லி நம்பாடுவானை சரண மடைந்தது காணுமென்கிறார்.*

ब्रह्मरक्षोवचः श्रुत्वा श्वपाकः संशितव्रतः ।
बाढमित्यब्रवीद्वाक्यं ब्रह्मराक्षसचोदितः ॥ ८७ ॥

ப்ரஹ்மரக்ஷோவச: ச்ருத்வா ச்வபாக: ஸம்சிதவ்ரத:
பாடமித்யப்ரவீத் வாக்யம் ப்ரஹ்மராக்ஷஸசோதித:. 87

நாம் விபீஷணனுக்கு முன்பு அபயப்ரதானம் பண்ணினாப்போலே நம்பாடுவானும் சரணாகதமான ரக்ஷஸ்ஸுக்கு பாடமென்று அபயப்ரதானம் பண்ணினான் காணுமென்கிறார்.

यन्मया पश्चिमं गीतं स्वरं कैशिकमुत्तमम् ।
फलेन तस्य भद्रं ते मोक्षयिष्यामि किल्बिषात् ॥ ८८ ॥

யந்மயா பச்சிமம் கீதம் ஸ்வரம் கைசிக முத்தமம்
பலேந தஸ்ய பத்ரம் தே மோக்ஷயிஷ்யாமி கில்பிஷாத். 88

இன்று ராத்ரி கைசிகமென்றொரு பண்ணைப்பாடினேன். அந்தகீதபலத்தினால் இந்த ராக்ஷஸ ஜன்மத்தினின்றும் விடுபட்டு மோக்ஷத்தை யடையக் கடவாய் என்று அபயப்ரதானம் பண்ணினான் காணும் நம்பாடுவான்.

ஸ்ரீவராஹ உவாச—

यस्तु गायति भक्त्या वै कैशिकं मम संसदि ।
स तारयति दुर्गाणि श्वपाको राक्षसं यथा ॥ ८९ ॥

யஸ்து காயதி பக்த்யா வை கைசிகம் மம ஸம்ஸதி
ஸ தாரயதி துர்காணி ச்வபாகோ ராக்ஷஸம் யதா. 89

யாவனொருவன் பக்தியோடேகூட நம்முடைய ஸன்னிதியில் வந்து கைசிகமென்கிற பண்ணைப் பாடுகிறான், அவன் ப்ரம்ம ரக்ஷஸ்ஸை உத்தரிப்பித்த நம்பாடுவானைப்போலே தன்னை யாச்ரயித்தவர்களை உத்தரிப்பிப்பன்— என்று ஸ்ரீவராஹநாயனார் பூமிப்பிராட்டியைப் பார்த்து அருளிச் செய்தார்.

एवं तत्र वरं गृह्य राक्षसो ब्रह्मसंस्थितः ।
जातस्तु विमले वंशे मम लोकश्च गच्छति ॥ ९० ॥

ஏவம் தத்ர வரம் க்ருஹ்ய ராக்ஷஸோ ப்ரஹ்மஸம்ஸ்தித:
ஜாதஸ்து விமலே வம்சே மம லோகஞ்ச கச்சதி. 90

இப்படி நம்பாடுவான் பக்கலிலே வரம்பெற்ற அந்த ரக்ஷஸ்ஸும் அந்த சரீரத்தை விட்டு நல்ல வம்சத்திலே நம்முடைய பக்தனாய்ப் பிறந்து, நமக்குப் பல்லாண்டு பாடி நம் பெரியவீடு பெற்றான் காணுமென்று நாச்சியாரைப் பார்த்து அருளிச்செய்தார்.

श्वपाकश्चापि सुश्रोणि मम चैवोपगायकः ।
कृत्वा तु विमलं कर्म स ब्रह्मत्वमुपागतः ॥ ९१ ॥

ச்வபாகச்சாபி ஸுச்ரோணி மம சைவோபகாயக:
க்ருத்வாது விமலம் கர்ம ஸ ப்ரஹ்மத்வமுபாகத:. 91

பின்பு நம்பாடுவானும் நெடுங்காலம் நம்முடைய வைபவத்தைப் பாடி நம்பெரியவீடு பெற்றான் காணுமென்று அருளிச்செய்தார்.

एतद्गीतफलं देवि कौमुदद्वादशीं पुनः ।
यस्तु गायति स श्रीमान् मम लोकञ्च गच्छति ॥ ९२ ॥

ஏதத் கீதபலம் தேவி கௌமுதத்வாதசீம் புந:
யஸ்து காயதி ஸ ஸ்ரீமாந் மம லோகஞ்ச கச்சதி. 92

நமக்குப்பாடுவான் பெறும் பேறு சொல்லுகிறோம்; யாவனொருவன் கார்த்திகை மாஸத்து சுக்லபக்ஷ த்வாதசி யன்றையதினம் நம்முடைய ஸன்னிதி முன்பே வந்து இந்த கைசிக மாஹாத்மியத்தை வாசிக்கிறான், யாவனொருவன் கேட்கிறான்—அவர்களும் "சூழ்ந் திருந்தேத்துவர் பல்லாண்டே" என்றும் "ஏதத் ஸாம காயந் நாஸ்தே" என்றும் சொல்லுகிறபடியே நமக்குப் பல்லாண்டு பாடிக்கொண்டு ஆத்மானுபவம் பண்ணிக்கொண் டிருப்பர்கள் காணும்—என்று நாச்சியாரைப் பார்த்துப் பெருமாள் அருளிச்செய்தார் இப்படி அருளிச்செய்த வார்த்தையைக் கேட்டு, நாச்சியாரும் ப்ரளயார்ணவத்திலுண் டான இளைப்பெல்லாம் தீர்ந்து இக்கானரூபமா யிருப்பதொரு உபாய வைபவமிருந்த படியென்—என்று க்ருதார்த்தை யானாள். ... ... ... *

இதி ஸ்ரீவராஹபுராணே பூமிவராஹஸம்வாதே
கைசிக மாஹாத்ம்யம் நாம அஷ்டசத்வாரிம்சோத்யாய:

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ பராசரபட்டார்ய: ஸ்ரீரங்கேசபுரோஹித:
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே.

ஸ்ரீபராசரபட்டரருளிச்செய்த
கைசிகபுராண வியாக்கியானம்
முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீராமாயணமும் - சரணாகதிகளும்.

வால்மீகி பகவான் இயற்றிய ஸ்ரீ ர்ராமாயணத்திற்கு "சரணாகதி சாஸ்த்ரம்" என்கிற வொரு பெயரும் ஆசிரியர்களால் வழங்கப்பெற்றது. எதனாலென்னில், இந்நூலில் அடுத்தடுத்து சரணாகதி காணப்படுதலால். இராமபிரானுடைய திருவவதாரத்தைக் குறித்து முதன்முதலாக தேவர்களின் சரணாகதி அமைந்தது. பரத சரணாகதி, காக சரணாகதி, மஹர்ஷி சரணாகதி, ஸுக்ரீவ சரணாகதி' விபீஷண சரணாகதி, ஸமுத்ர சரணாகதி......என்றிப்படி பல சரணாகதிகள் இதில் அமைந்திருப்பது காணுகின்றோம். இந்த சரணாகதிகளெல்லாம் உண்மையில் சரணாகதிதானா? என்கிற ஆராய்ச்சி செய்யப்படவேண்டியதுண்டு. சரணாகதியின் ஸ்வரூபத்தை சாஸ்த்ரங்கள் பலவாறு கூறுகின்றன. தன்னிடத்துக் கைம்முதல் ஒன்றுமில்லாமையையும், வேறு புகலற்றிருப்பதையும் அநுஸந்தித்துக்கொண்டு வணங்குவதை சரணாகதியென்று கூறுவது பெரும்பான்மை.

சரண்யனிருக்குமிடம் தேடிவருதல், 'எனக்கு நீ தஞ்சமாகவேணும்' என்று நெஞ்சால் நினைத்தல், (அல்லது) வாயினாற் சொல்லுதல். போக்கிடமற்று வந்து நிற்றல், தன் முயற்சி தவிர்ந்து நிற்றல் முதலியன பலவும் சரணாகதியாகக் கொள்ளப்படுவதுண்டு. ''வேண்டித் தேவரிரக்க வந்து பிறந்ததும்.'' என்று ஆழ்வார் அருளிச்செய்கையாலே தேவதைகள் வேண்டி யிரந்ததுதன்னையே அவர்களது சரணாகதியாகக் கொள்ளக் குறையில்லை. பரதாழ்வானது வேண்டுகோள் அவனுடைய வாசகத்தில் காணக் கிடக்கின்றது. காகத்தின் சரணாகதியைப் பற்றிப் பல வகை அபிப்ராயங்கள் உள்ளன. போக்கற்றுச் செயல் மாண்டு நின்ற நிலையையே அவன்பால் சரணாகதியெனக் கொள்வர் குரவர்.

தண்டகாரண்ய வாஸிகளான மஹர்ஷிகள் ''தே வயம் பவதா ரக்ஷ்யா: பவத்விஷயவாஸிந:'' என்றதோடு நில்லாமல் ''ரக்ஷிதவ்யாஸ் த்வயா சச்வத் கர்ப்பபூதாஸ் தபோதநா:'' என்றும் சொல்லியுள்ளார்கள். இதில் தங்களை 'கர்ப்பபூதா:' என்று சொல்லிக்கொண்டது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. கருவின் கணுள்ள குழந்தை கை கால் முடக்க நீட்டமாட்டாமேயிருப்பது போலத் தாங்களும் எவ்வகையாற்றலுமற்றவர்களென்று காட்டிக்கொண்டபடி. உடனே தங்களைப் பற்றி 'தபோதநா:' என்று சொல்லிக்கொண்டது தவத்தினால் தாங்கள் பேறு பெறப் பார்ப்பதாகச் சொன்னபடியன்று; எங்களுக்குத் தவம் புரிதல் குடியியல்பாக வந்ததேயன்றி நாங்கள் பேற்றின் பொருட்டு ஏற்றுக்கொண்டதன்று என்றவாறு. ஆகவே தண்டகாரணிய முனிவர்கள் தங்களது வறுமையைச் சொல்லிக்கொண்டு சரணாகதி செய்ததாகக் கொள்ளக் குறையில்லை.

கிஷ்கிந்தா காண்டத்தில் ஸுக்ரீவ சரணாகதியென்பது ஸுக்ரீவன் செய்த சரணாகதியென்றபடியன்று; ஸுக்ரீவனை நோக்கிச் செய்த சரணாகதியென்றபடி. ஸ்ரீராகவன் ஸுக்ரீவனை நோக்கிச் சரணாகதி செய்ததுண்டா? இது பிரமாண ஸித்தமா? என்று பார்க்கில், இலக்குமணன், தானும் இராமனும் ஸுக்ரீவனைச் சரணம் புகுந்ததாகச் சொல்லுகிறான். 'ராம: ஸுக்ரீவம் சரணம்கத:'' என்று

பலகால் சொல்லுகிறுன் இலக்குமணன். "லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி" என்கிறுன். இப்புடையிலே மற்றும் பலவும் பேசுகிறுன். இதையெல்லாம் இராமன் மறுத்திடாமல் கேட்டுக்கொண்டிருந்ததனுல்*அப்ரதிஷித்தம் அநுமதம் பவதி* என்கிற நியாயத்திஞல் இந்த சரணுகதியை இராமபிரான் தான் இசைந்ததென்றே சொல்லவேண்டியதாகிறது.

இதற்குமேல் இராமபிரான் சரணுகதி செய்வதற்கு அதிகாரிதானு? என்பது ஆராயத்தக்கதாகிறது. அடுத்தபடியாகவுள்ள ஸமுத்ர சரணுகதி ப்ரகரணத்தையுமெடுத்துக் கொண்டு இதனை ஆராய்வோம். கடலைக் கடப்பதற்கு உபாய சிந்தனை ப்ராப்தமான காலத்தில் இராமபிரான் விபீடணனைக் கேட்கும்படி நியமிக்க, அவன் "ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்து மர்ஹதி" என்று 'கடலரசனைச் சரணம் புகுவது நன்று' என்று கூற, அது கேட்ட இராகவன் தக்கதேயென்று சொல்லி அங்ஙனமே யநுட்டித்ததாகச் சொல்லப்படுகிறது. இது சரணுகதிதானு? என்று விமர்சிக்கப் புகுந்த சிலர் "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" என்று வால்மீகி கூறியிருக்கையாலே இது இஷ்ட ஸித்திக்காகச் செய்த சயனமேயொழிய சரணுகதியன்று என்று கருதுகிருர்கள்.

ஸ்ரீவசன பூஷணத்தில் - சரணுகதிக்கு அதிகாரி நியமமில்லை என்று கூறி அதனை உபபாதிக்குமிடத்து "தர்ம புத்ராதிகளும் த்ரௌபதியும்......................... பெருமாளும் இளைய பெருமாளும் தொடக்கமானவர்கள் சரணம் புகுருகையாலே அதிகாரி நியமமில்லை" என்கிற சூர்ணையில் இராமபிரானையும் ப்ரபத்தி பண்ணினவர்களில் சேர்த்து அருளிச் செய்திருக்கையாலே அதற்கு முரணுகக் கூறும் வார்த்தை ஏற்கத்தக்கதன்று. கடலரசனை நோக்கிப் பெருமாள் செய்தது சரணுகதியேயாகும். இதுவே ப்ரதிசயனரூபமாகச் சொல்லபபட்டதென்க.

ஆனுல், இங்கும் பெரிய கேள்வியொன்று எழும். ஸ்ரீவசன பூஷணத்தில் ப்ரபத்திக்கு தேச நியமம் கால நியமம் அதிகாரி நியமம் பல நியமம் ப்ரகார நியமம் முதலான எந்த நியமமும் கிடையாது என்று அருளிச் செய்து "விஷய நியமமேயுள்ளது" என்று தலைக்கட்டியுள்ளார்; "விஷய நியமமாவது குண பூர்த்தியுள்ள விடமே விஷயமாகை" என்றும் விவரணம் காட்டியுள்ளது. ஸர்வேச்வரன் ஒருவனே குணபூர்த்தியுள்ளவனென்பது விவாதமற்ற விஷயமாகையாலே அனைவரும் ஸர்வேச்வரன் பக்கலில் சரணுகதி செய்யவேணுமேயொழிய ஸர்வேச்வரன் ஒருவனிடத்திலும் சரணுகதி செய்யத்தகாது என்பதும் ஸ்ரீ வசனபூஷணத்திஞல் நன்கு தேறுவதாதலால் அந்த ஸ்ரீ வசன பூஷணந்தானே பெருமாளும் சரணுகதி செய்ததாக எங்ஙனம் கூறுகின்றதென்று கேட்க நேரும்.

இதற்கு ஸ்ரீ ராமாயணத்திலிருந்தே ஸமாதானம் பெறலாம். யுத்த காண்டம் மூன்ரும் ஸர்க்கத்தில் பெருமாளுடைய வார்த்தை வருமாறு;— "தபஸா ஸேதுபந்தேந ஸாகரோச் சோஷணேந வா, ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி ஸாகரஸ்யாஸ்ய லங்கனே" -- இத்த சுலோகத்தின் கருத்தாவது, தபஸ்ஸினுலோ அணைகட்டுதலாலோ, கடலை வற்றடிப்பதனுலோ இக் கடலைக் கடப்பது எனக்கு

எளிதேயென்பதாம். இங்குக் காட்டிய மூன்று உபாயங்களில் முன்னம் காட்டியது தபஸ்ஸு. அதன் பொருள் என்னவென்று பார்க்கவேணும். தபஸ்விகளென்றும் தாபஸரென்றும் சொல்லப்படுகிற முனிவர்கள் செய்யும் தவமன்று என்பது வெளிப்படை. பின்னை ஏதென்னில், தைத்திரீய உபநிஷத்தின் முடிவில் "தஸ்மாத் ந்யாஸமேஷாம் தபஸாம் அதிரிக்தமாஹு:" என்று சரணாகதியே உயர்ந்த தபஸ்ஸாக ஓதப்பட்டிருத்தலால், அதுவே இங்கு விவக்ஷிதம் என்னப் பொருந்தும். விபீஷணாழ்வான் "ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி" என்றபோது 'ஸர்வலோக சரண்யனை நானே உவர்க்கடலைச் சரண் புகுவது' என்று மறுத்துரைக்க வேண்டியிருக்க, அங்ஙனம் மறுத்திடாமல் அதனை உகந்து ஏற்றுக்கொண்டது ஏற்கெனவே தான்சிந்தித்திருந்த உபாயமேயென்னுமுவப்பினால்தான். ஆக, கடலரசனை நோக்கி பெருமாள் அநுட்டித்தது சரணாகதியேயென்று தேறும்.

பெருமாள் சரணாகதிக்கு அதிகாரியா? என்னும் விசாரமும் முக்கியமானதே. ஸாமர்த்தியமற்றவன் செய்யத்தக்கது சரணாகதி. ஸமர்த்தன் செய்யத் தகாதது. "அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:" [இந்த மீன்படு குட்டம் என்னை அஸமர்த்தனாக நினைத்திட்டது; இதோ பார், என் ஸாமர்த்தியமிருக்கும் படியைக் காட்டுகிறேன்] என்று மேலேசொல்லியிருக்கையாலும், கீழும் 'ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி' என்று சொல்லியிருக்கையாலும் பெருமாளுடைய ஸாமர்த்தியம் மறைக்கவோ மறுக்கவோ முடியாததாயிற்று, அத்தகைய ஆற்றலுடைய பெருமாள் சரணாகதியைக் கொள்ளத்தகாதுதான். ஆனாலும் "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றபடிக்குச்சேர வஸிஷ்டவிச்வாமித்ராதிகளைப் பணிந்தது போலவும், அகஸ்த்யமுனிவரிடம் ஆதித்ய ஹ்ருதயம் உபதேசம் பெற்றது போலவும் இதுவும் ஒக்குமென்று கொள்க.

அவதாரங்களில் எம்பெருமான் தன்னுடைய ஆற்றலை மறைத்திடவேண்டுமென்று நினைத்தாலும் மறைக்கமுடியாமற் போகிறதென்பதை அபயப்ரதான கெட்டத்தில் "பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர". என்பது முதலான சுலோகங்களினாலும் அறிகிறோம். க்ருஷ்ணாவதாரத்தில் கோவர்த்தனோத்தரணம் முதலான அதிமானுஷ சேஷ்டிதங்களையும் காண்கிறோம். இத்தகைய இடங்களில் கூரத்தாழ்வான் போன்ற ஆசாரியர்கள் "கூஹித ஸ்வமஹிமாபி ஸுந்தர! த்வம் வ்ரஜே கிமிதி சக்ரமாக்ரமீ:, ஸப்தராத்ர மததாச்ச கிம் கிரிம் ப்ருச்சதச்ச ஸுஹ்ருத: கிமக்ருத:" என்று கேள்வி கேட்கும் முகத்தால் எம்பெருமான் திருவுள்ளத்தை யாரேயறிவார் என்று நம் போல்வார் ஸமாதாநம் அடையும்படி செய்து போருவது தவிர வேறொன்றில்லை.

இராமபிரான் தனது தன்மையைத் தான் மறைப்பது இருக்கட்டும். வால்மீகி முனிவர் பெரும்பாலும் மறைப்பதும் சிறுபான்மை வெளியிடுவதுமான பரிசைக் கேண்மின். ஸ்ரீராமாயணத்தின் உபக்ரமத்திலுள்ள வால்மீகி நாரத ஸம்வாதத்தில் "ஜ்ஞாதுமேவம்விதம் நரம்" என்பதும் "தைர் யுக்த: ச்ருயதாம் நர:" என்

பதுமாய் நிகழ்ந்தது. இடையில் கௌசிக முனிவன் வாக்கினால் "அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்ய பராக்ரமம்" என்று பெருந்திரளில் பேச வைப்பதும், "உத்திஷ்ட 'நரசார்தூல' கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்" என்று ஏகாந்தத்தில் பேசவைப்பதுமாகி. பட்டாபிஷேகத்திலும் "அப்யஷிஞ்சந் நரவ்யாக்ரம்" என்றே தலைக்கட்டும்படியாயிற்று. இவையெல்லாம் ஒருபுறமிருக்க, ஸமுத்ர சரணாகதி கெட்டத்தில் சயனத்தில் தலையணையாகக் கொண்ட திருக்கையை விசேஷிக்குமிடத்து "புஜை: பரமநாரீணாம் அபிம்ருஷ்டம் அநேகதா' என்கிறார் வால்மீகி முனிவர். ,மிகச் சிறந்த மாதர்களின் கைகளால் வருடப்பட்டது இராமபிரானது திருக்கை' என்கிறது. ஏகதார விரதனான இராமன் திறத்து இங்ஙனே பேசத் தகுமோ? இங்கு வ்யாக்கியான சக்ரவர்த்தியான கோவிந்தராஜர் உண்மைப் பொருளை உணர்த்துகிறார்— ஸ்ரீ பூமி நீளா தேவிகளே இங்குப் பரமநாரிகளாகக் கருதப்படுகிறார்களென்று. இதனால் இராமபிரானுடைய உண்மை ஸ்வரூபம் வெளியிடப்பட்டதாகவில்லையா? இங்ஙனே மற்றுஞ்சில பலவிடங்களுமுண்டு.

ஜடாயுமஹாராஜர் என்கிற பெரியவுடையார்க்கு "மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாந் அநுத்தமாந்" என்று விடை கொடுத்ததைப் பற்றி "ப்ராதாஸ் ததா பரகதிம் ஹி கதம் ககாய" என்று கூரத்தாழ்வான் கேள்வி கேட்டாலும் நம்பிள்ளை "ஸத்யேந லோகாந் ஜயதி" என்கிற தசரதவசனத்தைக் கொண்டு ஸமாதாநமருளிச் செய்திருக்கையாலே அங்கு மனுஷ்ய பாவனைக்கு ஹானியில்லையென்றே கொள்ளலாம். ஸமுத்ர சரணாகதியும் மனுஷ்ய பாவனைக்குச் சேர்ந்ததாகும். ஆயினும் முந்துற ப்ரபத்தி பண்ணிவிட்டு பின்னை "சாபமாநய ஸௌமித்ரே—ஸாகரம் சோஷயிஷ்யாமி—அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:" இத்யாதிகள் சொன்னது தகுமோவென்னில்; இத்தகைய வ்யக்திகள் ப்ரபத்திக்கு அநதிகாரிகள் என்கிற சாஸ்த்ரார்த்தத்தை வெளியிடுவதற்காகவே பெருமாள் சரணாகதி செய்தது. என்பது ஆசார்யர்களின் திருவுள்ளம். ஆக ஸ்ரீராமாயணம் சரணாகதி சாஸ்த்ரம் என்னுமிடத்தை ஒருவாறு உபபாதித்தோம்.

---

# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை

(முன் தொடர்ச்சி.)

## 40. ஸ்ரீமதுபய வே. பண்டிதரத்னம் குப்பண்ணு ஸ்வாமி.

இத் திருநாமம்பூண்ட மஹாபுருஷர் பெரும்பாலும் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்தவர். அவ்விடத்திலுள்ள மஹாராஜ ஸம்ஸ்க்ருத வித்யாசாலை யில் இந்த ஸ்வாமி பல வருஷங்கள் அத்யக்ஷராக எழுந்தருளியிருந்து நூற்றுக் கணக்கான வ்யக்திகளை நாநா சாஸ்த்ரங்களில் ப்ரவீணர்களாக்கி யருளினவர். சதுச்சாஸ்த்ர வித்வானான விவர்க்கு நியாய வேதாந்தங்களில் அநந்ய ஸாமாந்ய மான ப்ராவீண்யமிருந்தது. எம்பெருமானார் திருநாராயணபுரத்தில் எழுந்தருளி யிருந்தகாலத்தில் ஐம்பத்திருவர் என்று ஒரு ஸமூஹத்தை நியமித்தருளினா ரென்பது ஸுப்ரஸித்தம்; அந்த ஸமூஹத்தில் இந்த ஸ்வாமியின் குடியும் சேர்ந்த தாகும். ஆனதுபற்றியே ஸ்தானீகம் என்ற உபபதமும் இவர்க்கு விளங்கி வந்தது. இவர் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் அதிகரித்தது மைஸூர் நகரத்திலென் றும், ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீமத் பரமஹம் ஸேத்யாதி. எம்பார் ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலும், ஸுப்ரஸித்தரான ஸ்ரீமத் புளியக்குடி ஸ்வாமி ஸன்னிதியிலும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யஸம்ப்ரதாயங்களை அதிகரித்தா ரென்றும் கேள்வி. ஸுப்ரஸித்த ப்ரசண்ட பண்டிதோத்தமரான மைஸூர் அனந்தாழ்வார் ஸ்வாமி யின் வேதாந்தவாதாவளிகளை அச்சிடுவித்தபோது அவற்றைப் பரிசோதித்தவர் களில் இந்த மஹாவித்வான் முதல்வராயிருந்தவர். அவற்றுக்கு டிப்பணிகளும் இவர் எழுதியுள்ளார். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி திருவரங்கம் பெரிய கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயராக எழுந்தருளி யிருந்த காலத்தில் இந்த ஸ்வாமி அங்கு ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகா ப்ரவசனம் செய்தருளினதை அடியேன் நேரில் அறிவேன். திருநாராயணபுரத்திலும் இரண்டு பர்யாயம் நெருங்கி ஸேவித்திருக் கிறேன். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து ஏறக்குறைய ஐம்பது ஸம்வத்ஸர மாகிறது. இவருடைய திருக்குமாரர் பண்டிதராயிருந்தவர் இளமையிலேயே பரமபதித்தாரென்று கேள்வி. .... ... .... .... *

## 41 ஸ்ரீமத் பரமஹம்ஸ- அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

இந்த ஸ்வாமி காரப்பங்காடு ஜீயர் என்றும் வழங்கப்பட்டு வந்தார். அடியேன் ஏழெட்டு பிராயத்திலிருக்கும்போது இந்த ஸ்வாமி ப்ரஹ்மசாரியாய் அடியேனுடைய திருத்தகப்பனாரிடம் ஸாஹித்ய பாடங்கள் வாசித்துக்கொண்டி ருந்தார். சிலவாண்டுகளுக்கப்பால் வடநாட்டில் எங்கேயாவது சென்று வாழ வேணுமென்று கருதி எந்தவிடம் உசிதமானதென்று திருத்தகப்பனாரைக் கேட்டுக் கொண்டிருந்தார். அக்காலத்தில் ப்ருந்தாவனம், புஷ்கரம், ஸீதாராம்பாக், கல்யாண் முதலான விடங்களிலுள்ள ஸன்னிதிகளுக்கு அர்ச்சக பரிசாரகர்களைத்

திருத்தகப்பனர் அனுப்பிக்கொண்டிருந்தபடியால் தம்மை ஓரிடத்திற்கு அனுப்பும் படி ஓார்த்தித்துவந்தாரிவர். அப்போது ஸ்ரீமதுபயவே புதுப்பேர். இளையவில்லி ராமாநுஜாசாரியர் ஸ்வாமி ராஜபுதானஸம்ஸ்தானத்தில் கோட்புட்லி யென்னு மிடத்தில் வாழ்ந்துவருபவர் தம்முடைய மந்திரத்திற்கு ஒருவரை யனுப்பவேணு மென்று திருத்தகப்பனர்க்கு எழுதியிருந்தபடியால் காரப்பங்காடு ராமாநுஜா சாரியர் என்னுமிவரை அவ்விடத்திற்கு அனுப்பினர். அந்த இளையவில்லி ஸ்வாமி உபயவேதாந்தக்கடலில் ஆழ மூழ்கின ப்ரபல வித்வான். அவரிடம் சென்று சேர்ந்த இந்த ராமாநுஜாசாரியர் அவரிடத்தில் ஸம்ஸ்க்ருதஜ்ஞானத்தை அபி விருத்தி செய்து கொண்டார். சிலவாண்டுகள் அவர் திருவடிகளில் வாழ்ந்துவந் தார். அப்போது அயோத்யையில் (கீர்த்திமூர்த்தி) யோகி. பார்த்தஸாரதி ஐயங் கார் ஸ்வாமியால் ஓதிஷ்டாபிதமான ஸன்னிதிக்கு அர்ச்சகர் வேண்டியிருந்தபடி யால் இவர் அவ்விடத்திற்கு (இளையவில்லி ஸ்வாமியால்) அனுப்பப்பட்டு அங்கே கைங்கர்ய பரராக இருந்துவந்தார். இருக்கையில் ஸம்ந்யாஸாச்ரமம் ஸ்வீகரிக்க வேணுமென்று தோன்றித் திருத்தகப்பனர்க்கு விண்ணப்பம் விடுத்தார் "ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் (ஷஷ்டி ஜீயர்) ஸ்வாமி இப்போது எங்கு எழுந்தருளியிருக்கிறர்?" என்று கேட்டிருந்தார். அக்கடிதம் இற்றைக்கு அறுபத்து நான்காவது ஸம்வத்ஸரமான க்ரோதி வருஷத்தில் பங்குனி மாதத்தில் வந்தது. அப்போது திருத்தகப்பனர் திருமேனி பாங்கின்றிக்கே சயனத்திலிருந்த படியால் அவருடைய நியமனம் பெற்று அடியேனே பதில் எழுதினேன் - ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி ஹைதராபாத் நகரத்தைச் சார்ந்த ஸீதாராம்பாக்கில் எழுந்தருளி யிருக்கிறரென்று. அஃதறிந்த காரப்பங்காடு ஸ்வாமி உடனே ஸீதாராம்பாகுக் கெழுந்தருளி அவ்விடத்திலேயே ஆச்ரமஸ்வீகாரம் பெற்று ஜீயர் ஸ்வாமியோடு கூடவே யாத்திரையடைவில் காஞ்சீபுரம் வந்து சேர்ந்து அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் மடத்திலேயே ஒரு ஸம்வத்ஸர மெழுந்தருளியிருந்து ஸம்ப்ரதாய க்ரந்த காலக்ஷேபம் செய்து கொண்டிருந்தார்.

அயோத்யையில் சிலவாண்டுகள் வாழ்ந்ததனல் அயோத்யா ராமாநுஜ ஜீயரென்றே ப்ரஸித்திபெற்றர். அக்காலத்தில் கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்திற்கு ஸ்வாமியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் கஸ்தூரி ஜீயர் ஸ்வாமி கள் திருநாடலங்கரித்தபடியால் அந்த ஸ்தானத்திற்கு வரிக்கப்பட்டு அங்கே யெழுந்தருளி ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமியானர். அப்போது, சென்னை ஹோ அண்டு கம்பெனித் தலைவரான உப்பட்டூர் ஆழ்வார் செட்டியாரும், அப்பா அண்டு கம்பெனித் தலைவரான பாஷ்ய நாயுடுவும் ஸ்வாமியிடத்தில் ஈடுபாடு கொண்டு ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்தைப் பலவாயிர ரூபாய்ச் செலவில் ஜீர்ணோத்தாரணம் செய்வித்தார்கள். அப்போது ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப் பெருமாள் ஸ்வாமி ஒரு ஸம்வத்ஸரகாலமும், [மேலே பரஸ்துதரான] திரு நாராயணபுரம் குப்பண்ணஸ்வாமி ஒரு ஸம்வத்ஸரகாலமும் எழுந்தருளியிருந்து ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசனம் செய்தருளினர்கள்.

கோயில் தேவஸ்தானதிகாரிகளுக்கும் ஜீயர் ஸ்வாமிக்கும் அபிப்ராய பேதங்கள் ஏற்பட்டதனல் நாலைந்து ஸம்வத்ஸரங்களுக்குப் பிறகு மடத்தை

விட்டு தென் திருக்காவேரி வழியில் அம்மாமண்டபத்தருகில் ஓராச்ரமம் ஏற்படுத்திக் கொண்டு அங்கே சிலகாலம் எழுந்தருளியிருந்து பிறகு, ஸ்ரீபெரும்பூதூரில் எம்பார் ஜீயர்மடம் அநாதமாயிருந்தபடியால் அதை ஸநாதமாக்கிக் கொண்டு அங்கே யெழுந்தருளியிருந்தார். மீண்டும் வடநாட்டு வாஸத்தில் ருசிகொண்டு ஹரித்வார ப்ராந்தம் எழுந்தருளி கங்காதீரத்தில் சிலகாலம் வஸித்து ஸ்ரீபெரும்பூதூருக்கு மீண்டெழுந்தருளித் திருநாடலங்கரித்தார். இவையெல்லாம் நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு முந்தின ஸமாசாரங்கள். ... ... ... *

## 42. ஸ்ரீமத்பரமஹம்ஸ. தேரழுந்தூராண்டவன்.

இப்போது ஆண்டவன் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற திருக்குடந்தை யாண்டவனுக்கு முந்தினவர் தென்பரையாண்டவன்; அவர்க்கும் முந்தினவர் ஆக்கூராண்டவன். அவர்க்கும் முந்தினவர் தேரழுந்தூராண்டவன். அந்த மஹாஸ்வாமியை முதன் முதலாகத் திருநாராயணபுரத்தில் வைரமுடியுத்ஸவத்தில் ஸேவிக்கப்பெற்று அப்போதே பரமக்ருபைக்குப் பாத்திரமாயினேன். அதன் பிறகு விரைவிலேயே ஸ்ரீகாஞ்சிக் கெழுந்தருளி வேகவதிக்கரையில் தர்மகர்த்தா தோட்டமென்று ப்ரஸித்தமாக வழங்கு மிடத்தை ஆச்ரமமாகக் கொண்டு பலஸம்வத்ஸரங்கள் ப்ரவசனம் செய்து கொண்டெழுந்தளியிருந்தார். தினப்படியாக ஏதாவதொரு ஸமயத்தில் இங்கு வந்து போகவேணுமென்று அடியேனுக்குக் கடுங்கட்டளை யிட்டிருந்தார். 'இந்த ஆஜ்ஞையை நிறைவேற்ற அடியேனாலாகாதே' என்று விஜ்ஞாபித்து 'ஸ்வாமி தேவப்பெருமாளை மங்களாசாஸனம் செய்தருள நியமேந எழுந்தருளுகிறபடியால் அங்கே ஸேவித்துக் கொள்ளுகிறேன்' என்று சொல்லி அப்படியே நாடோறும் அரைமணி காலத்திற்கு மேல் ஸம்பாஷணம் ப்ராப்தமாகி வந்தது. ஆச்ரமத்திற்கு விடைகொள்வதும் பல்காலுண்டு. அப்போது அடியேன் சென்னை முதலான விடங்களை இறையுமறியாமல் ஸ்வஸ்தானத்திலேயே நியதமாயிருந்து வந்தபடியால் நாள்தவறாமல் ஸேவித்து வார்த்தை யாட பாக்கியம் வாய்த்தது. ஸ்வாமி பக்கலில் வைதுஷ்யத்திற்காட்டிலும் ராஸிக்யமே விஞ்சியிருந்தது. மிதபாஷித்வ மென்பதை ஒரு நாளுங் கண்டிலேன்.

பகவத் விஷயாநுபவத்தில் மிக வூற்றமுடையவராதலால் காஞ்சியில் ஒரு பர்யாயம் பகவத் விஷய ப்ரவசனம் செய்தருளினர். ஈடு முப்பத்தாறாயிரப் படியையே காலக்ஷேப க்ரந்தமாகக் கொண்டு ஸாதித்து வந்தார். ஒரு நாள் விஜ்ஞாபித்தேன்—'அஹோபில மடத்து ஸம்ப்ரதாயத்தில் ஈடு உண்டு; முநித்ரய ஸம்ப்ரதாயத்தில் உள்ளதாகக் கேள்வியில்லையே' என்று. 'த்வேஷமுடையார்க்கு இல்லை, எனக்குண்டு' என்று ஒரே வார்த்தையில் முடித்திட்டார். ஈட்டைத் தாம் குருமுகமாகவே அதிகரித்ததாகவும் ஸாதித்தார். திவ்ய ப்ரபந்தத்தில் த்வேஷமுடையவர்களையும் இந்த காலக்ஷேபத்தில் ஆகர்ஷித்துக் கொண்டது அடியேனுக்கு வியப்பாக இருந்தது. இவ்வூர் ஆனைகட்டி வீதியில் நீலப்பாடி ஸாமியையங்கார் என்றொருவரிருந்தார். வேதாத்யயந நிரதரான அவர் திவ்ய ப்ரபந்தத்தில் மிகுந்த வைரமுடையராயுமிருந்தார். அப்படிப்பட்ட அவரையும் ஈட்டு ப்ரவசன

கோஷ்டியில் உட்கார வைத்துக் கொண்டாராண்டவன் என்று அக்காலத்தில் பலர் வியக்கும்படியாயிருந்தது. காலை 10-மணிக்குமேல் தான் காலக்ஷேபம் உபக்ரமமாகும்; தேவப்பெருமாள் பவித்ரோத்ஸவத்தில் அதே ஸமயத்தில் நடைபெறும் வேதபாராயணத்தையும் விட்டு இந்த நீலப்பாடி ஸ்வாமி பகவத் விஷய ப்ரவசனச்ரவணத்தில் பேராமல் பெயராமல் இருந்து வந்தது ஆண்டவனுக்கு அபரிமிதமான கீர்த்தியை விளைத்தது.

ஒருநாள் ஸம்பாஷித்துக்கொண்டிருக்கையில் "கோபால இதி க்ருஷ்ண! த்வம் ப்ரசுர க்ஷீரவாஞ்சயா, ச்ரிதோ, மாத்ருஸ்தந க்ஷீரமப்யஹோ துர்லபம் க்ருதம்" என்கிற ச்லோகத்தை அடியேன் விஜ்ஞாபித்து விவரிக்க நேர்ந்தது; உடனே ஆண்டவன் 'இந்த சுலோகத்தைத் தமிழ்ப்பாட்டாக மொழிபெயர்த்துச் சொல்லுவீரா?' என்று ஸாதிக்க, உடனே.

கண்ணா ! நின்னை ஆயனென்று கண்டு மிக்க பால்பெறற்
கெண்ணி நின்ன பாதபங்க யத்தை நண்ணினேனரோ
எண்ணமீது மாறுபட் டொழிந்தவாறு கேட்டியோ
அன்னைபாலு மென்றனக் கருமையாக்கினையரோ

என்று விஜ்ஞாபித்தேன். திருவுள்ளமுவந்து பல வார்த்தைகள் ஸாதித்தருளினார்.

[கருத்து:—கண்ணா! நீ இடையனாகையாலே உன்னையடைந்தால் மிக்க பால் கிடைக்குமென்றாசைப்பட்டு வந்தடைந்தேன். ஏற்கெனவே கிடைத்துக் கொண்டிருந்த தாய்முலைப்பாலும் கிடைக்காதபடி செய்திட்டாயே! என்கை. மறுபிறவி தவிரத்திருத்தினையென்கை. "ஸ்தநந்தயத்வம் ந புநர் பபூவ" இதி யாதவாப்யுதயே.] ... .... .... ... ... ....

ஸர்வபூதஸுஹ்ருத்தாக எழுந்தருளியிருந்தது தேரழுந்தூராண்டவனுக்குத் தன்னேற்றம். ஸௌசீல்ய நிதி யென்றே சொல்லவேணும். காஞ்சியிலேயே திருநாட்டுக் கெழுந்தருளியுமாயிற்று. .... ... *

## 43. ஸ்ரீ உ. வே. திருநாராயணபுரம் தி. அ. ஸம்பத்ஸ்வாமி.

திருமலை அனந்தாண்பிள்ளை குலதிலகராய் ஸ்ரீரங்கம் ஸம்பத் ஸ்வாமியென்றே வழங்கப்பட்டுத் திருநாராயணபுரத்தில் வாழ்ந்து சென்ற ஸம்வத்ஸரத்திலேயே திருநாடலங்கரித்தவரான ஸ்ரீ ஸம்பத்குமாராசார்யஸ்வாமி திருநாராயண புரத்திற்குத் திலகமாக விளங்கின ஒரு விலக்ஷண வ்யக்தி. உபய வேதாந்தத்திலும் ஆழ்ந்த ஞானமுடையராய் ப்ரவசன ப்ரவீணராயுமிருந்தார். அவ்விடத்து ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் நெடுங்காலம் அத்யாபகராக எழுந்தருளியிருந்தவர். ஆழ்வாரருளிச்செயல்களைக் கசடறக்கற்று ஸன்னிதி கைங்கர்யங்களில் நிஷ்ணாதரா யிருந்தது விசேஷித்த வைபவமிவர்க்கு. இந்த ஸ்வாமியின் அந்தேவாஸிகளாகப் பலர் விளங்குகின்றார்கள். இரு திருக்குமாரர்கள் இவருடைய திருநாமத்தை விளங்கச்செய்து வருகிறார்கள். ... ... *

# அடியேனுடைய பழங்கதை யொன்று.

[தானே யெழுதிய தன் சரிதையில் 71, 72 பக்கங்களிலிருந்து.]

ஸ்ரீமத் தோணுங்குளம் ராமாநுஜாசாரிய ரென்பவர் எனது இளமையில் 16, 17 வயதில் கிரஸணுயில் வியாபாரத்தில் அளவற்ற செல்வம்படைத்து மஹா தனிகராய் தேவப்பெருமாள் திருவடிகளில் பரமபக்தராய் அபரிமித கைங்கர்யங் களைச் செய்பவராயிருந்து வந்தார். அவர் சில பல வருஷங்கள் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு ரிஸீவராகவும் நீதி மன்றத்தில் நியமிக்கப்பட்டு வேலைபார்த்து வந் தார். அவர்க்கு ஸம்ஸ்க்ருதத்திலோ ஸம்ப்ரதாயத்திலோ அவ்வளவாக ப்ரவேச மிருந்ததில்லை. ஆனாலும் காஞ்சிக்கு வந்த பின்பு பெரியோர்களை யடுத்துப் பழகி நல்ல விவேகம் பெற்றார். அவர் வைதிகர்களுக்கும் வித்வான்களுக்கும் ஏதாவது வியாஜத்தையிட்டு ஸன்மானங்கள் செய்துகொண்டே யிருந்தார். ஒருநாள் நூற்றுக்கால் மண்டபத்தில் பண்டிதர்களையெல்லாம் வரவழைத்து ஒரு ஸதஸ்ஸு நடத்தினர். ஸாமான்ய பண்டிதர்களும் விசேஷ வித்வான்களுமாகப் பலர் குழுமி யிருந்தார்கள். ஒவ்வொருவரும் தேவப்பெருமாளைப் பற்றி 10, 15 நிமிஷம் ஏதா வது சொல்லவேணுமென்று அவர் கோரியிருந்தார். இடையிடையே அவரும் சில கேள்விகள் ஜிஜ்ஞாஸு முறையில் கேட்டுக்கொண்டிருந்தார்.

அப்படி கேட்டுக்கொண்டு வருகையில், வரதராஜ பஞ்சாசத்தில் "த்வத்தேஜஸி த்விரத சைலபதே! விம்ருஷ்டே ச்லாக்யேத ஸந்தமஸபர்வ ஸஹஸ்ரபாநோ:" என்பதை யெடுத்து இதன் தாற்பரியத்தை யாராயினுமொரு வித்வான் விளக்கி யுரைக்க வேணுமென்று கோரினர். 'தேவப்பெருமாளே! தேவரீருடைய தேஜஸ்ஸை ஆராய்ந்து பார்த்தால் ஸூர்யனைக் காட்டிலும் அமாவாஸ்யை சிலாகிக் கப்படும்' என்பது அந்த ச்லோகப் பகுதிக்குப் பொருள். இது அநாயாஸமாக யாவரும் சொல்லக்கூடியதே. அமாவாஸ்யைக்கு வந்த ஏற்றமென்ன? ஸூர்ய னுக்கு வந்த தாழ்வு என்ன? என்பதை உபபாதிக்கவேணுமே; அதையே அந்த ஸ்வாமி கோரினர். இதில் (ஸஹஸ்ரபாநோ:) என்றதில் பஞ்சமீவிபக்தியா? ஷஷ்டீ விபக்தியா? என்று பலர்க்கு மயக்கம். பஞ்சமியே யொழிய ஷஷ்டியன்று. ஆனல் வியாக்கியானம் செய்தவர்கள் அறுதியிடாதே ஏதோ எழுதியிருக்கிறார் களாம்; அதனால்தான் இந்தக் கேள்வி விளைந்தது. வித்வான்கள் சிறிது ஆலோசித்துவிட்டு "இது தேசிக திவ்யஸூக்தி யல்லவா? லேசாகச் சொல்லிவிட முடியுமா?" என்பார் சிலர்; "வியாக்கியானம் பார்த்தால் தெரியும்" என்பார் சிலர்; வியாக்கியானத்திலும் தலை சுற்றலாகத்தானிருக்கிறது" என்பார் சிலர்; இப்படி யாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

அடியேன் திருத்தந்தையாரிடத்தில் இது பாடங்கேட்டிருந்தபடியால் உத்ஸாஹமாக வெழுந்து தாத்பரியத்தை விளக்கமாக விஜ்ஞாபித்தேன். இதை ஒரு கதைபோல் எடுத்துச்சொன்னேன்; (அதாவது) அக்காலத்தில் ஸ்ரீமத் திருப்புட் குழி ஸ்வாமியை எல்லாரும் ஒப்புயர்வற்ற வித்வானகச் சொல்லிக் கொண்டிருப் பர்களாதலால் அந்த ஸ்வாமியைத் தேவப் பெருமாளுடைய தேஜஸ்ஸின் ஸ்தா னத்திலே வைத்தேன். ஸ்வல்பசாஸ்த்ரஜ்ஞானம் படைத்தவொரு ஸாதாரண

வித்வானை ஸூர்யனுடைய ஸ்தானத்திலே வைத்தேன். உண்மையில் ஒரு படிப்புமில்லாதவொரு யதாஜாதனை அமாவாஸ்யையின் ஸ்தானத்திலே வைத்தேன். திருப்புட்குழி ஸ்வாமி சாஸ்த்ரார்த்தம் நடத்தும்போது ஏறக்குறைய அவருக்கு ஸமாநஸ்கந்தரானவொரு ப்ரபலவித்வான் பேசினுல் ஏற்றிருக்கும்; அரைகுறை படிப்பாளியானவொரு ஸாதாரண வித்வான் தன்னை ப்ரபல பண்டிதராக நினைத்துச் செருக்குற்றிருந்தபடியாலே தாம் ஏதோ பிரதிவாதம் செய்வதாக எழுந்தார்; அதனுலென்னுகும்? நாலு வார்த்தையிலேயே பங்கமடைந்து நின்ருர். ஒரு படிப்பு மில்லாத யதாஜாதர் ஒருவருளரே; அவரும் அந்த ஸதஸ்ஸிலே இருந்தார்; அவர் உள்ளபடி தம்மை அஜ்ஞராகவே நினைத்திருப்பவராதலால் தாம் ஒன்றும் வாய் திறக்கவில்லை; அதனுல் பங்கமடைய ப்ரஸக்தியே யில்லையாயிற்று. இடையில் ஒருவர் பங்கமடைந்தரரே, அவர் ஸ்வல்பம் கல்வி கற்றிருந்தபடியாலல்லவோ வாயைத் திறக்க நேர்ந்து அதனுல் பங்கமடைய ப்ராப்நமாயிற்று. அவர் நினைத்தார் 'ஐயோ, நாம்சிறிது கல்வி கற்றபடியாலன்ருே இப்படி பங்கமடையநேர்ந்தது; இந்த யதாஜாதனைப் போலே நாமும் நிரக்ஷரகுக்ஷியாயிருந்து விட்டால் இந்த பங்கம் நமக்கு நேர்ந்திராதே' என்று நினைத்தார். இதுபோல, தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் முன்னிலையிலே பங்கமடைந்த ஸூர்யன், அவ்விதமாக பங்கமடைய ப்ரஸக்தியற்ற அமாவாஸ்யையைக் கொண்டாடி 'நாம் அமாவாஸ்யையாகப் பிறவாமற்போனேமே!' என்று அநுதபிக்க நேர்ந்தது. இதுவே இங்கு தேசிகனுடைய திருவுள்ளம். இந்த வர்ணனையினுல், ஸூர்ய தேஜஸ்ஸை ஸர்வாத்மநாபங்கப் படுத்தவல்லது தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸு என்பது தேறி நிற்கும். இதனை சமத்காரமாக ஸாதித்திருக்கிறபடி—என்று விரிவாக வுபந்யஸித்தேன். இதைக்கேட்ட ஸதஸ்யர்கள் யாவர்க்கும், விசேஷித்துக் கேள்விகேட்ட அந்த தோணுங்குளம் ராமாநுஜாசார்ய ஸ்வாமிக்கும் பரமானந்தமுண்டாயிற்று. அப்போது ஒருவர்க்கும் அஸூயை தலைகாட்டினதில்லை. ... *

## மஹோத்ஸவ ஸூசனங்கள்.

நாளது (கீலகஷு) சித்திரைமாதத்தில் 11௨ க்ருஷ்ணைகாதசி செவ்வாய்க் கிழமையன்று (23-4-68) எம்பெருமானர் மஹோத்ஸவத் தொடக்கம். சாத்துமுறையான மறுநாள் (3-4-68ல்) தேவப்பெருமாளுடைய வைகாசி யுத்ஸவத்திற்குப் பூர்வாங்கமான கடைவெள்ளிக்கிழமை யுத்ஸவம் (7-5-68) செவ்வாய்க் கிழமையன்று ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம். (1 5 68) புதன்கிழமை மதுரகவிகளுத்ஸவம் தொடக்கமாகி (10-5-68) வெள்ளிக்கிழமை சாத்துமுறையாகும். அன்றே வைசாகோத்ஸவ த்வஜாரோஹணம். தேவப்பெருமாள் பெரிய காஞ்சீபுரமெழுந்தருளி மீண்டபிறகு நம்மாழ்வார் ஸன்னிதிக்கெழுந்தருளி சாத்துமுறையாகும். (12-5-68) ஞாயிற்றுக்கிழமையன்று வைசாகோத்ஸவம் பெரியதிருவடி ஸேவை சித்திரைமீ 30௨ பௌர்ணமியன்று நடைபெற வேண்டிய நடைபாவி யுத்ஸவம் வைசாகோத்ஸவ ப்ரதிஹதமாய் முன்னடியே (14-4-68) ஞாயிற்றுக் கிழமை நடைபெறும். ... ... ... ... *

# பாதுகா பர்யவேக்ஷணம்.

நிகழும் பங்குனிமாதத்து ஸ்ரீரங்கநாத பாதுகா பத்ரிகையில் "ஸ்ரீபாஷ்யத்தில் ஒரு விசேஷக் குறிப்பு" என்பதோர் கட்டுரை ஸ்ரீ வித்வான் V. கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமியால் வரையப்பட்டு வெளிவந்துள்ளது. இத்தகைய வியாஸங்களில் அடியேன் கண்செலுத்தும்போது, கட்டுரைகாரர் வ்யுத்பந்நர்தாஞ? என்பதைத் தான் முந்துற முன்னம் விமர்சிப்பது வழக்கம். பிறகுதான் விஷயத்தில் மதி செலுத்துவது. தர்மதர்மி விவேகமுள்ளவர்களையே அடியேன் வித்வானென்றும் விற்பன்னரென்றும் கொள்வது. ... .... "ஸ்ரீபாஷ்யம் 2-3-1. அதிகரணத்தில் ஆகாசம் நித்யமா? நித்யமில்லையா என்று விசாரம் காணப்படுகிறது" என்பது வித்வானுடைய உபக்ரமவாக்யம். நித்யமா? என்னும் விகற்பத்திற்கு ப்ரதிகோடியான விகல்ப சரீரம் நித்யமன்ரு? (அல்லது) அநித்யமா? என்பதேயாம். நித்யமில்லையா என்பது ஸர்வாத்மநா அநந்விதம். இதை வடமொழியில் எழுத வேணுமாஞல் 'நித்யோ வா? நித்யோ நாஸ்திவா?' என்றெழுதலாகுமா? என்று பார்க்கவேணும். இங்கு அந்யோந்யாபாவம் விவக்ஷிதமேயொழிய வேறு எந்த அபாவமும் வக்தாவுக்கு விவக்ஷிதமன்று. விவக்ஷிக்கப் பொருத்தமுமில்லை உண்டா இல்லையா என்னவேண்டும்போது முன்னே நித்யத்வமென்கிற சொல் இருந்து தீரவேண்டும். உள்ள சொல்லோ நித்யம் என்பது, ந து நித்யத்வமிதி. தர்ம தர்மிஜ்ஞான பரீக்ஷையில் இது மிகச் சிறு விஷயம்.

தமிழில் எழுதத் தெரியாத குற்றம் கூறலாமேயன்றி தர்மதர்மிஜ்ஞான தாரித்ரியம் சொல்லவொண்ணுதென்னில், மேலே இத்தகைய ஸம்ஸ்க்ருத ப்ரயோகமுமொன்று காட்டுவோம். "ச்ருதப்ரகாசிகையில்.........அநைகாந்திகம் உள்ளதென்று கூறப்பட்டுள்ளது" என்றெழுதியுள்ளார். அநைகாந்த்யமுள்ளதென்ரே அநைகாந்திகத்வமுள்ளதென்ரே எழுதியிருக்கவேணும். 'பர்வதத்தில் தூமத்வ மிருக்கிறது' என்ருற்போன்ற பிரயோகமிது, சப்த விந்யாஸங்களை ஒழுங்குபடச் செய்யமாட்டாமை அவ்யுத்பத்தி நிபந்தனம். "பூதலே கடத்வஸ்ய வர்த்தமாநாத்"—"கடபூதலவர்த்ததேத்வாத்" இத்யாதி ஸ்மர்யதாம்.

மேலும் "ஆகாசாதிகரணத்தில் நிராகரணம் பண்ணப்பட்டிருப்பதால்' என்றொருவரி யெழுதுகிருர் வித்வான். ஆகாசம், வியத் என்கிற சப்தங்கள் ஸமாநார்த்தகமாஞலும் ஆகாசாதிகரணம் வேறு, வியததிகரணம் வேறு' அவ்வதிகரணத்தின் ப்ரமேயம் வேறு; இவ்வதிகரணத்தின் ப்ரமேயம் வேறு. ப்ரதமாத்யாய ப்ரதமபாதத்திலுள்ள ஆகாசாதிகரணமே இவர்க்கு விவக்ஷிதமா? அல்லது, த்விதீயாத்யாய த்ருதீயபாதத்திலுள்ள வியததிகரணத்தை விவக்ஷித்து, வியத்தென்ருலும் ஆகாசமென்ருலும் ஒன்றுதானே யென்றுகொண்டு ஆகாசாதிகரணமென்கிருரா? என்பது தெரியவேணும்.

முடிவாக, "இப்படி யிருக்க" என்று தொடங்கி அதிகரண ஸாராவளியின் (226 ஆம்) சுலோகத்தின் இரண்டு வியாக்கியானங்களிலும் ஏதோ பொருத்தமின்றி எழுதப்பட்டிருப்பதாக நிகமனம் செய்கிருர். மூலமான ஸாராவளி ச்லோகத்தில் இரண்டரை பாதங்கள் பூர்வபக்ஷாநுவாதம். [இதி ந ஸத்] என்று ஸித்தாந்தாரம்பம். இது ஆத்மாதிகரண ச்லோகமேயொழிய வியததிகரண ச்லோக

மன்று. இத்யாதிகளை வித்வான் நன்கு நெஞ்சில்கொண்டு தம்முடைய சங்கையை ஸுவ்யக்தமாக நிரூபணம் செய்க. உள்ள இரண்டு வியாக்கியானங்களும் பொருந்தாதவையாகவே யிருக்கட்டும். மூலத்திற்குப் பொருத்தமாக இரண்டே வரியில் தாம் வியாக்கியானம் பண்ணிக் காட்டுக. நிரூப்யமாணே பொருந்தாமை யொன்றுமில்லை யென்று தாமே தெளியலாகும்.

நேற்றை தநுர்மாஸாவஸானத்திலொருநாள் சென்னை ஸ்ரீபுரம் ஆச்ர மத்திற்கு விடைகொண்டு ஸ்ரீமதாண்டவனைத் தெண்டன் ஸமர்ப்பித்து வார்த்தை யாடநேர்ந்தபோது பாதுகாபத்ரிகையின்போக்கு திருவுள்ளத்திற்கு த்ருப்திகர மாக இல்லாமலிருக்கும்படியை ப்ராஸங்கிகமாக ஸாதித்து 'இனிமேல் பத்ரிகைக்கு வியாஸங்களை நானே யெழுதுவதாக நிச்சயித்திருக்கிறேன்; ஸ்ரீராமாநுஜனுக்கு தேவரீர்தானே யெழுதுகிறது. அப்படியே யெழுத உத்தேசித்திருக்கிறேன்' என்றருளிச்செய்ததைக் கேட்டு மிக மகிழ்ந்திருந்தேன்; ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் இதை நினைவூட்டி நிற்கிறேன். ஸ்ரீஸ்வாமியின் அமுதமொழி வெள்ளங்களைச் செவிவழியாக மட்டுமன்றிக்கே கண்வழியாகவும் பருகப்பெறும் பாக்கியம் உலகுக்குக் கிடைக்குமேல் ஈதொப்பதின்பமுண்டோ? ... ... *

## ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயணஜீயர்ஸ்வாமி.

இத்திருநாமம்பூண்ட மஹாஸ்வாமியை நமது நாட்டினர் யாரும் மறந்திரார். இரண்டு ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு நமது தென்னாடுகளில் விசேஷமாக ஸேவை ஸாதித்தவர் என்பதையும், கோயில் திருவல்லிக்கேணி. காஞ்சீ முதலான பல தலங்களில் ஸ்ரீராமக்ரது ஸ்தம்பப்ரதிஷ்டை முதலான பல அப்ரமேய காரியங் களைச் செய்தருளினவர் என்பதையும் நினைவூட்டுகிறேன். இந்தஸ்வாமி இளம் பிராயத்திலேயே மதப்ரசாரத்தில் ச்ரத்தைகொண்டு ஆந்த்ரப்ரதேசத்தில் பலபல விடங்களில் விசிஷ்டாத்வைத மதப்ரசாரக ஸங்கங்களை ஏற்படுத்தி "எண்டிசை யும் பேர்த்தகர நான்குடையான் பேரோதிப பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து" என்ற பூதத்தாழ்வார் நியமனப்படியே இந்தஸ்வாமி செய்தருள்வது பிறரொருவராலும் அநுகரிக்கவும் முடியாதது. ஸர்வேச்வரனுடைய ஸங்கல்பத்தி னும் விஞ்சிய ஸங்கல்பமுடையவர் இந்த மஹாஸ்வாமி. ஸ்ரீராம மஹாக்ரதுக்கள் நூற்றெட்டு செய்தருள்வதாகவும், ஒவ்வொரு க்ரதுவுக்கும் மஹாஸ்தம்பம் நாட்டு வதாகவும் ஸங்கல்பித்துக்கொண்ட இந்த ஸ்வாமி * இமவந்தர் தொடங்கி இருங் கடலளவு முள்ள பல ஸ்தலங்களில் 99 க்ரதுக்களையும் ஸ்தம்பப்ரதிஷ்டைகளையும் தலைக்கட்டி நூறாவதை பத்ராசல க்ஷேத்ரத்தில் 7-4-68 அன்று ஸமாப்தி செய் தருளினார். சேஷித்துள்ள எட்டையும் த்வாரகை முதலாகத் திருமலையீறாக எட்டு ஸ்தலங்களில் பூர்த்தி செய்தருளத் திருவுள்ளம்பற்றியிருக்கிறார்.

23-3-68ல் நாம் பத்ராசல க்ஷேத்ரம் விடைகொள்ளநேர்ந்து இந்த ஸ்வாமி யின் அதிமாநுஷ க்ருத்யங்களைக் கண்ணாரக்காண நேர்ந்தது. "என்சொல்ல வல்லேனென் வாய்கொண்டே" என்று நம்மாழ்வாரருளிச் செய்ததையே விஜ்ஞா பிக்கவேண்டியிருக்கிறது. ஹோமதூமங்களும் வேத கோஷங்களும் புராண படனங்களும் நாநாப்ரவசனங்களும் பரத்வாஜாச்ரமத்தைவென்ற ஆதித்தியங் களும் ஸ்வர்ணபீதாம்பராதி தானங்களும் தேவர்களும் வியக்கத்தக்கவை. ... *